


# அன்பு மக்களே!

B4
030

தமிழ்க் கத்தோலிக்க மாதாந்த வெளியீடு ஆடி 2016, ஒளி 21, கதிர் 224

TAMIL CATHOLIC MONTHLY PUBLICATION JULY 2016 YEAR 21 VOL 224



JESUS I TRUST IN YOU

இயேசுவே நான் உம்மில் நம்பிக்கை வைக்கிறேன்.



**யாழ் ஆயர் மேதகு**
**ஜஸ்டின் ஞானப்பிரகாசம் ஆண்டகை**



**மட்டக்களப்பு ஆயர் மேதகு**
**ஜோசப் பொன்னையா ஆண்டகை**

இலங்கை யாழ்ப்பாணம், மட்டக்களப்பு தமிழ் மறை மாவட்டங்களின் இரண்டு மேதகு ஆயர்களும் கனடா ரொறொன்ரோ மறை மாவட்ட தமிழ் கத்தோலிக்க சமூக மக்களின் வருடாந்த சமாதான திருயாத்திரையில் விசுவாசத்திற்கு உயிர் நீத்த கனடிய வேதசாட்சிகள் திருத்தலத்தில் வாரீர் வாரீர் என்று கனடா வாழ் தமிழ் கத்தோலிக்கர்கள் இருவரையும் ஒன்றாக வரவேற்கின்றது. அனைத்துத் தமிழ் கத்தோலிக்கர்களும் புளகாங்கிதம் அடைகின்றோம். இருவரின் ஆசியுரைகளும் தமிழ் கத்தோலிக்க மக்களின் உயர்வுக்கும் ஒற்றுமைக்கும், சமாதானத்திற்கும் வழிசமைக்கும் என நம்புகிறோம். மேலும் இறை இரக்கதின் யூபிலி ஆண்டில் இருவரின் வருகையினால் கனடா வாழ் தமிழ் கத்தோலிக்கர் மத்தியில் இறைபக்தியும், புரிந்துணர்வும், இரக்கமும் ஏற்பட வாய்ப்புண்டாகுமென நம்புகிறோம்.

நன்றி.



**“அன்புமக்களே”**
**தமிழ் கத்தோலிக்க வெளியீட்டக குழு**

# கத்தோலிக்க கிறிஸ்தவ வாழ்வின் அடிப்படை

திருப்பலி கிறிஸ்தவ வாழ்வின் ஆதாரமும் கொடுமுடியுமாகும் அனைத்து மற்ற அருட் சாதனங்கள் இதோடு பிணைக்கப்பட்டுள்ளன. மற்ற திருவருட் சாதனங்களில் கடவுளின் கொடைகளை நாம் பெறுகிறோம். ஆனால் நற்கருணை என்னும் இத்திருவருட் சாதனத்தில் கடவுள் தம்மையே நமக்குத் தருகிறார். நற்கருணை என்னும் இத்திருவருட்சாதனம் பல்வேறு பெயர்களில் வழங்கப்பட்டு வருகிறது, திருப்பலி, பலிப்பூசை, திருப்பலிகொண்டாட்டம், திருவழிபாடு, இத்திருப்பலி இரண்டு முக்கிய பகுதிகளை உள்ளடக்கியது.

## 1. இறைவார்த்தை வழிபாடு
## 2. நற்கருணை வழிபாடு

இறை வார்த்தை வாசகங்களையும் (முதல் வாசகம், திருப்பாடல், இரண்டாம் வாசகம், வாழ்த்தொலி, நற்செய்தி மறையுரையையும் வார்த்தை வழிபாட்டின் மையப் பகுதியாகக்கொள்ளலாம். உலகெங்கும் திருப்பலி என்ன மொழியில் நிறைவேற்றப்பட்டாலும் வாசகங்கள் குறிப்பிட்ட நாளுக்கு வேதாகமத்தில் இருந்து அதே பகுதிதான் உலகெங்கிலும் வாசிக்கப்படுகிறது. ஒரு நாளுக்கு அறுபத்தி ஐந்து இலட்சத்திற்கும் மேற்பட்ட குருக்கள் ஒரு கோடிக்கு மேற்பட்ட திருவழிபாட்டு இறைவார்த்தை வாசகங்கங்கள் பொது மக்கள் மத்தியில் வாசிக்கப் படுகின்றன.

## வாசகங்கள் அமைக்கப்பட்டுள்ள முறை:

பொதுவாக கலண்டர் ஆண்டு என்பது ஜனவரி 1ல் தொடங்கி டிசம்பர் 31ல் முடிவு பெறுகிறது. கத்தோலிக்க திருச்சபையில் திருவழிபாட்டு ஆண்டு என்பது முதல் ஞாயிறு (பொதுவாக டிசம்பர் மாதத்தின் முதல் வருகின்ற ஞாயிறு) தொடங்கி கிறிஸ்தரசர் பெருவிழாவோடு (நவம்பர் கடைசி ஞாயிறு) நிறைவு பெறுகிறது. ஆக வெவ்வேறு ஆண்டும் தொடக்க நாள், நிறைவு நாள் மாறுபடுகிறது. இது அவ்வருட இயேசுவின் உயிர்ப்பு பெருவிழாவைப் பொறுத்து மாறுபடும். ஏன், எப்படி மாறுபடுகிறது? திருவழி பாடு ஆண்டு என்பது திருவருகைக் காலம் (4 வாரங்கள்) கிறிஸ்து பிறப்பு (வாரங்கள்), தவக்காலம் (5 வாரங்கள்), பாஸ்க்கா காலம் (7வாரங்கள்), பொதுக் காலம் (34 வாரங்கள்) ஆகிய 52 வாரங்களை உள்ளடக்கியதாகும்.

ஞாயிற்றுக் கிழமைகளில் 3 சுற்றுகள் (cycle A, B, C) கொண்ட வாசகங்கள் பயன் படுத்தப்படுகிறது. உதாரணமாக 2016 ஆண்டு நாம் cycle C பின்பற்றுகிறோம். இது கடந்த 2015 டிசம்பர் முதல்வாரத்தில் (திருவருகைக் காலத்தின் முதல் ஞாயிறு) இச்சுற்று ஆரம்பமாயிற்று. இந்தவருடம் 2016 நவம்பர் மாதம் 20 தேதியில் கிறிஸதரசர் பெருவிழாவோடு முடிவடைகிறது. அடுத்த வருடம் 2016ல் Cycle A, 2017 A என்ற சுழற்சியில் அமைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொறு சுற்றிலும் முதல் வாசகம், தியானப்பாடல், இரண்டாம் வாசகம், நற்செய்தி வாசகங்கள் மாறுபடும்.
வார நாட்களில் இரண்டு சுற்றுகள் (வருடம் 1, வருடம் 2) கொண்ட வாசகங்கள் பயன் படுத்தப் படுகிறது. வார நாட்களுக்கு இரண்டு சுற்றுகளே இருப்பதால் ஒற்றைப்படைகொண்ட ஆண்டில் முதல் வருட சுற்றும் இரண்டைப்படை கொண்ட ஆண்டில் இரண்டாம் வருட சுற்றும் இரட்டைப்படை ஆண்டில் இரண்டாம் வருட சுற்றும் பயன்படுத்தப்படுகிறது. உதாரணமாக 2015 ஒற்றைபடையாக இருப்பதால் முதல் ஆண்டுக்குள்ள வாசகங்களைத்தேர்வு செய்யவேண்டும். இரண்டு ஆண்டுகளுக்கும் நற்செய்திமாறாது. ஆனால் முதல் வாசகம் மற்றும் தியானப்பாடல் மாறுபடும்.

## மறையுரை:

திருப்பலியில் வாசிக்கப்பட்ட வாசகங்களின் அடிப்படையில் மறையுரை அமைய திருச்சபை பரிந் துரைக்கிறது. வாசகங்களின் பின்னனி, விளக்கம், வாசகங்களின் மையக்கருத்து, வாசகங்கள் மூலம் கடவுள் நமக்குத்தரும் செய்தி, ஆகியவை களை நமக்குத் தகுந்த முறையில் எடுத்தியம்ப மறையுரை ஒரு சிறந்த கருவியாக. நம் அருள் வாழ்வில் வளர, தொடர்ந்து வாழ தேவையான ஆன்மீக உணவாக மறையுரை அமைகிறது. இவ்விதம் கோடிக்கணக் காணோர் வாசிப்பதை கேட்டும் புரிந்தும் கொள்வதற்கும் மறை ஆற்றப்பட்டும் நாடாத்தப்படும் மாபெரும் சம்பவத்தை இலை மறை காய்யாக மறைத்து கத்தோலிக்க திருச்சபையில் வேதாகமம் வாசிக்கப் படுவதில்லை அவர்களுக்கு விளக்கம் இல்லை என்று கத்தோலிக்கர்களே சொல்வதை இனி மேல் ஆவது இவ்விதம் சொல்வதை தவித்துக்கொள்ளுங்கள். திருப்பலியில் வாசிக்கப்டும் வாசகங்களுக்கு நீங்கள் செவிமடுத்தலே அளப்பெரிய ஆற்றலாகும். ஆகவே "பரம்பொருள்" தமிழ் கத்தோலிக்க வானொலி நிகழ்ச் சியில் இறைவார்த்தை வழிபாடு நாம் செய்கிறோம் இது உலகில் உள்ள அனைத்து தமிழ் மக்களுக்கும் இறைவார்த்தை கத்தோலிக்கர்களின் முதல் வழிபாடு என்று உணர்த்தவே.


# ஸ்தாபிதம்

ஆனிமாதம் 1995

## முகவரி


2623 Eglinton Ave EastUnit # 2nd floor
Scarborough. On. M1K 2S5

E-mail:-
Tamilcatholicpublication@gmail.com

தொலை பேசி (647) 348 - 5100
தொலைநகல் (647) 348 - 5100

# வாழ்த்துரை

பேராசிரியர் இ. பாலசுந்தரம்
தலைவர்,கனடாத் தமிழ் எழுத்தாளர் இணையம்

கனடாவிலேவாழும் கத்தோலிக்கத் தமிழ் மக்களால் பெரிதும் விரும்பிவாசிக்கப்படும் "அன்புமக்களே" என்றமாத வெளியீடாக வெளிவரும் பத்திரிகையின் 21வது ஆண்டு நிறைவு விழாச் சிறப்புமலருக்கு வாழ்த்துச் செய்திஅனுப்புவதில் மிக்கமகிழ்ச் சியடைகின்றேன்.

இப்பத்திரிகையின் ஆசிரியர் மதிப்புக்குரிய. திரு டேவிட் தோமஸ் அவர்களின் அயராத முயற்சியினாலும் அவர் கத்தோலிக்கசமயத்தில் கொண்டுள்ள பற்றுதியினாலும் இப்பத்திரிகையைத் தொடர்ச்சியாகப்பலஆண்டுகள்

வெளியிட்டுவந்தமைபாராட்டுதலுக்கு உரியதாகும். இதன் ஆசிரியர் தமிழின் மீதும் தமிழ் மக்கள் மீதும் மிக்கபற்றும் ஈடுபாடும் கொண்டவர். எம் மதத்தின ரையும் சமமாகமதிக்கும் பண்புள்ளம் கொண்ட நல்லமனிதர். அதனால் அவர் சைவமக்களாலும் நன்குமதிக்கப்படுகின்றவர். அதனால் அவரது பத்திரி கையின்வாசகர் வட்டம் பரந்திருந்தமையை என்னால் அறியக் கூடியதாக இருந்தது.

பல்லின ,பல்கலாசார மக்கள் வாழும் இந்நாட்டிலே அனைத்து மக்களும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவும், ஏனைய கலாசாரங்களை அறிந்து கொள்ளவும் துணையாக அமைவனவற்றுள் ஆற்றல் மிக்க சாதனங்களாக விளங்குவன ஊடகங் களாகும். அவ்வகையில் 'அன்புமக்களே' என்றபத் திரிகை மூலம் புனித பைபிள் கூறும் மானிடர் பினபற்றவேண்டிய நன் நெறிகளைப் பத்திரிகை மூலம் மாதந்தோறும் மக்களுக்கு எடுத்துரைக்கும் பணியினை இதன் ஆசிரியர் மிக்க நேர்த்தியாகச் செய்துவந்துள்ளார். கத்தோலிக்கமக்களை ஒன்றிணைக்கும் சாதனமாகவும் 'அன்புமக்களே' பத்திரிகை செயற்பட்டு வந்துள்ளமையையும் விதந்து குறிப்பிடவேண்டும்.

'அன்புமக்களே' பத்திரிகைதொடர்ந்தும் வெளிவந்து மக்களுக்கு கத்தோலிக்கம் சார்ந்தநல்லறிவூட்டும் பணியினை மேற்கொள்ள வேண்டுமெனஎல்லாம் வல்ல ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றேன்.

**பேராசிரியர் இ. பாலசுந்தரம்**
**றொறன்ரோ. balasundarame@yahoo.com**

# வாழ்த்துரை

கவிஞர் வி. கந்தவனம்
போசகர் கனடாத் தமிழ் எழுத்தாளர் இணையம்

தமிழ் கத்தோலிக்க வெளியீட்டகம் வெளியிட்டு வரும் **அன்புமக்களே** என்னும் அரியசஞ்சிகைக்கு அகவை இருபதொன்று என்பது இனிப்பானசெய்தி.

இதனை **அரியசஞ்சிகை** என்று ஒருகாரணத்தோடு தான் குறிப்பிடுகின்றேன்.அன்புஎன்பது ஒருகுறுகிய வட்டத்துக்குள்ளேதான்குடங்கிக் கிடக்கின்றது. அந்தவட்டத்துக்குக் குடும்பம் என்றுபெயர். இதற்குஅப்பால் அன்பு இல்லைஎன்றுயான் சொல்லவரவில்லை. இருக்கிறது,ஆனாற் செயற்படுவதில்லை.

அன்பைப் பரந்தஅளவில் 'அன்புமக்களே' வளர்க்கமுயல்வதால் அதனை அரியசஞ்சிகை என்றுஅழைத்தல் தகும்.

இதன் ஆசிரியர் திரு. டேவிட் தோமஸ் அவர்களை இருபத்தைந்துஆண்டுகளுக்குமேலாகயான் நன்குஅறிவேன். அவரதுமுறுவல் முகம் அவரை ஓர் இனியமனிதராகப் பலருக்கும் பரப்புரைசெய்யும்.

அன்பினும் ஆர்வம் உடைமை அதுவினும்
நண்பெனும் நாடாச் சிறப்பு

என்னும் திருக்குறள்வழி அவர் பலருக்கும் நண்பராயினர். அத்தகையநண்பர்களுள் நானும் ஒருவன் என்பதில் எனக்கும் மகிழ்ச்சிதான்.

கடந்த இருபது ஆண்டுகளாக மக்கள் மத்தியில் அன்புணர்ச்சியை வளர்த்து வருகின்ற தமிழ் கத்தோலிக்க ஆசிரியர் திரு. டேவிட் தோமஸ் அவர்களையும் அன்புமேவப் பாராட்டுகின்றேன். கூடவே பத்திரிகை வெளியீட்டுக்கு உதவிவரும் சகோதரிமரின ரஅந்தோனிப்பிள்ளை அவர்களையும் மற்றுமுள்ள தொழில்நுட்ப உதவியாளர்களையும வாழ்த்துகின்றேன்.

யானும் ஆத்மஜோதி என்றகாலாண்டுசஞ்சிகை ஒன்றைநடத்துகின்றவன் என்றவகையில் சஞ்சிகையை நடத்துவதிலுள்ள சிரமங்களை நன்கு அறிவேன். சிரமங்களைச் சமாளித்து இருபத்தி ஓராண்டு களுக்கு வெற்றிகரமாகப் சஞ்சிகையைப் பவனிவரச செய்த சாதனை போற்றுதற்குரியது.

தொடர்ந்து **அன்புமக்களே** வெளிவரவும் வெள்ளிவிழா,பொன்விழா ஆகியவற்றைக் கண்டு சாதனைபடைக்கவும் அன்பினால் அது அகிலத்தை ஆளவும் வாழ்த்துகின்றேன்.

அன்புடன்,

**வி. கந்தவனம்**

# கனடாவில் இரண்டாவது தமிழ் தியாக்கோன்



## அருட் திரு சகோதரர் றோய் இம்மானுவேல்

பரலோகத்திலிருந்து தேவ தூதர்கள் அணி அணியாக இறங்கி வந்து நம்மிடையே சூழ்திருக்க ஆலய மக்கள் நாம் மகிழ்ச்சியாக ஒன்று கூடி அன்புடன் தியாக்கோன் றோய் இம்மானுவேல் அவர்களை நம் பங்குத்தந்தை தலைமையில் பெருமகிழ்ச்சியோடு கரகோச ஒலியுடன் வருக வருக என வரவேற்கின்றோம்.

இன்று நம் கண் முன் வீற்றிருக்கும் தியாக்கோன் றோய் இம்மானுவேல் அவர்கள் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த திருவாளர் மாற்குப்பிள்ளை அவர்கட்கும் சில்லாலையச் சேர்ந்த திருமதி மேரி மாற்க்குப்பிள்ளை அவர்கட்கும் ஒன்பதாவது மகனாகத் தோன்றியவர்.

இவர் தமது இளமைக்காலத்தை யாழ்ப்பாணத்தில் ஆரம்பித்தாலும் இரண்டு வயதிலிருந்து மருதானையை வசிப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்.புனித யோசப் கல்லூரியில் தமது பாடசாலை வாழ்க்கையைத் தொடர்ந்தார்.

பேற்றோர் மிகவும் கடவுள் பக்தி உடையவர்கள். குடும்பத்தில் பத்துப் பிள்ளைகளைப் பெற்றெடுத்தாலும் கல்விச்செல்வத்தில் மட்டுமல்ல நல்லொழுக்கத்திலும் விசுவாசப் பாதையிலும் கடவுள் பக்தியிலும் பிள்ளைகளை வளர்த்து வந்ததுமட்டுமல்ல பிள்ளைகளுக்கும் சமூகத்திற்கும் முன்மாதிரியாக ஆலயப்பணிகளிலும் ஈடுபாடுடையவர்களாக விளங்கினர்.இதன் பலனாக ஏற்கனவே இறை பணியில் இணைந்து சேவை செய்யும் அருட் சகோதரியும் உண்டு.

இவர் சிறு வயது தொட்டு தாயகத்தில் ஆலயத்தில் பீடப்பரிசாதகராக சேவை புரிந்தவர். அது மட்டுமல்ல சகோதரர் டிவோட்டா தலைமையில் நடைபெறும் புதுவாழ்வுக் கூட்டத்திலும் இணைந்து செயல்பட்டவர்.

இந்தநிலையில் இவர் தாயகத்திலிருந்து கனடாவிற்குப் புலம்பெயர்ந்தாலும் தனது ஆலயப் பணியைக் கைவிடவில்லை கத்தறீனா சியன்னா என்ற ஆலயத்தில் பங்கு மக்களோடு இணைந்து தொடர்ந்து பணிபுரிந்தவேளையில் பிள்ளைகளையும் அந்தப் பணியில் செயலாற்ற ஊக்கம் கொடுத்து அவர்களையும் பணிபுரிய வைத்தார்.

அதேவேளை கனடா கத்தோலிக்க புதுவாழ்வு செபக்குழுவிலும் இணைந்து செயல்பட்டார் .இந்நிகழ்வு இவரது பயிற்சிக்காலத்தில் இவருக்குப்பெருதும் கை கொடுத்தது. வீடுகளைத்தரிசிப்பதற்கும் வீடுகளில் செப வழிபாடுகள் நவநாட்கள் முன்னெடுப்பதற்கும் நற்செய்தியைப்பற்றிய விளக்கங்களை மக்களுடன் பகிர்ந்துகொள்வதற்கும் பெரிதும் உதவியாக அமைந்தது.

இவரது ஆண்மீகத்தாகம் விசுவாச வாழ்க்கை ஆலயப்பணி இவருடைய நன் நடத்தை யாவற்றையும் அவதானித்த கத்தறீனா சீயன்னா பங்குத்தந்தை லேன்டோ அடினளார் தியாக்கோன் பயிற்சிக்காக பதின்னாங்கு பேரை தெரிவுசெய்தபோது இவரையும் தெரிவுசெய்தார்.

தெரிவுசெய்யப்பட்ட இவர் ஐந்து வருடங்கள் கடுமையான பயிற்சி பெற்றார். பயிற்சி பெறும் காலங்களில் பல்வேறு இடங்களுக்கு பயிற்சிக்காக அனுப்பப்பட்டார்.இந்தப்பயிற்சி மிகவும் கடுமையானதொன்று. குருமாணவர் குருமடத்திலிருந்து பயிற்சி பெறுவது இலகுவானது. ஆனால் டீக்கன் றோய் அவர்கள் தனது மனைவி இரண்டு பிள்ளைகளுடன் குடும்பத்தையும் பார்க்க வேண்டும் அத்தோடு வேலைக்கும் சென்று எட்டு மணி நேரம் உழைக்கவும் வேண்டும். இவற்றை எல்லாம் மிகவும் சிரமப்பட்டு பொறுமையுடன் தாங்கிக்கொண்டு ஐந்து வருடகாலப் பயிற்சியை இறை ஆசியுடன் வெற்றியாக முடித்துள்ளார்.இந்தக்காலங்களில் தமது அன்புக்குரிய பிள்ளைகளின் எத்தனையோ பிறந்த நாட்களைக்கூட தவிர்த்து பயிற்சிபெற்றது பாராட்டுக்குரியது.

இவரது பயிற்ச்சிக்கு இவரது இடைவிடாத செபமும் தெய்வபக்தியும் இவரது துணைவியாரின் ஒத்துளைப்பும் பெருதும் பங்காற்றியது.

பதின்னாங்கு பேர் தெரிவுசெய்யப்பட்ட போதும் ஒன்பது பேரே தியாக்கோன்களாகத் திருநிலைப்படுத்தப்பட்டார்கள்.

கத்தறீனா சியன்னா பங்குத்தந்தை லேன்டோ அடிகளாரால் இவர் தெரிவுசெய்யப்பட்டாலும் நமது தமிழ் சமூகத்திக்கும் இவரது பணி சிறக்க திருச்சபை வழிசமைத்துள்ளது. தியாக்கோன் றோய் இம்மானுவேல் அவர்கள் கனடா நாட்டின் இரண்டாவது தமிழ் தியாக்கோனாக திருநிலைப்படுத்தப்பட்டாலும் இன்று இவர் ஒருவரே தமிழ்மொழி பேசும் தியாக்கோனாகக் காணப்படுகிறார். இவரது பணி சிறந்தோங்க இறைபதம் நாடிநிக்கின்றோம். நன்றி.

**காவலூரான்**

# இறைவனின் இரக்கத்தைக் திருச்சபை நாடுகிறது

சிலுவையில் அறையுண்டு உயிர்ப்பிக்கப்பெற்ற கிறி ஸ்து மூலம் வெளிப்படுத்தப்பட்ட இறைவனின் இரக் கம் பற்றிய உண்மையைத் திருச்சபை பறைசாற்றி, பல்வேறு வழிகளில் அதை அறிக்கையிடுகின்றது. தோடர்ந்து, மனிதர் வழியாக மனிதர்க்கு இரக்கம் காட்டத் திருச்சபை விரும்புகிறது. இப்பொழுது இருக் கின்ற உலகை விடச் சிறந்த. அதிக மனிதத்தன்மை கொண்ட ஒரு நிபந்தனையாகவும் திருச்சபை காண் கிறது. ஆயினும், எந்த நேரத்திலும், வரலாற்றின் எந்தக் கட்டத்திலும்-குறிப்பாக: மிக நெருக்கடியான இக்காலத்தில் இறைவனின் இரக்கத்துக்காக மன்றா டுவதைக் திருச்சபை மறந்துவிட முடியாது: மனித இனத்தை அழுத்தி அச்சுறத்துகின்ற தீமையின் பல்வேறு வடிவங்களுக்கு நடுவில் இறைவனின் இரக்கத்தைக் கூவி அழைப்பதைத் திருச்சபை மறக்க இயலாது. இதுவே கிறிஸ்த்து இயேசுவில் திருச்சபைக்கு வழங்கப்படுள்ள அடிப்படை உரிமையும் கடமையும் ஆகும்: கடவுள் மட்டிலும், மனிதர் மட்டிலும் திருச்சபை கொண்டுள்ள உரிமையும் கடமையும் இறைவனின் இரக்கத்தைத் திருச்சபை நாடுகிறது. ஆகும் உலகுமயமாக்கல் (secularization) என்ற கோட்பாட்டுக்குப் பணிந்து மனிதனின் தன்னுணர்வு எந்த அளவுக்கு இரக்கம் என்னும் சொல்லின் பொருளைப் புரிந்துகொள்ளத் தவறுகின்றதோ - எந்த அளவுக்கு இறைவனிடமிருந்து அகன்று செல்லுகின்றதோ – அந்த அளவுக்குப் பலத்த குரலெழுப்பி கடவுளின் இரக்கத்தை வேண்டிடத் திருச்சபைக்கு கடமையும் உரிமையும் உண்டு. இரக்கத்தை இறைஞ்சி இறைவன்பால் எழுப்பப்படவேண்டிய இப்பலத்த குரல்கள் இக்காலத் திருச்சபையின் அடையாளமாகத் துலங்கவேண்டும். சிலுவையில் அறையுண்டு உயிர்த்தெழுப்ப பெற்ற இயேசுவில அதாவது, பாஸ்கா மறைபொருளில் - ஏற்கெனவே அருளப்பட்டு விட்டதாகத் திருச்சபை அறிக்கையிட்டுப் பறைசாற்றும் இரக்கத்தின் உறுதியான வெளிப்பாடாக இக்குரல்கள் விளங்கவேண்டும். இந்தப் பாஸ்க்கா மறை பொருளில் தான் இரக்கத்தின் முழுநிறைவான வெளிப்பாடு காணக்கிடக்கிறது அதாவது சாவை விட ஆற்றல் படைத்த, பாவத்தை விட சக்திவாய்ந்த, எல்லா விதத் தீமைகளையும் விட வலிமைகொண்ட அன்பு மனிதன் பாதாளத்தில் விழும்போதும் அவனைக் தூக்கி நிறத் திடும் அன்பு மாபெரும் அச்சறுத்தல்களின்று அவனை விடுவிக்கும் அன்பு-இம் மறைபொருளில்தான் முழுமை யாக வெளிப்பட்டது.

இன்றைய மனிதன் இந்த அச்சுறுத்தல்களை உணர் கிறான். இவை பற்றி மேலே கூறப்பட்டது பொது வான ஒரு குறிப்புச் சுருக்கமே தவிர வேறன்று. உலகில் புரையோடிக்கிடப்பதோடு, மனித குலத்துக்கு முட்டுக்கட்டைபோடுகிற பயங்கர வலிப்பிழுப்புகளுக்கான தீர்வு பற்றி இன்றைய மனிதன் அடிக்கடி கவலையோடு கேள்வி எழுப்புகிறான். இரக்கம் என்னும் வார்த்தையைச் சில நேரங்களில் சொல்வதற்குக் கூடத்துணிச்சல் அற்ற நிலையில் மனிதன் இருக்க நேரிடும்போது. அல்லது மறையின் உட்பொருளை இழந்த மனச்சான்றுக்கு இணைமாற்றை அவன் காணாது தவித்திடும் வேளையில், தனது சொந்தப் பெயரால் மட்டும் அன்று, நம்காலத்தில் வாழும் ஆண், பெண் அனைவருடைய பெயராலுமே இரக்கம் என்ற இச்சொல்லை எடுத்துக்கூறத் திருச்சபைக்கு அதிகக்கடமை எழுகின்றது. எனவே இரக்கம் பற்றிய இந்த ஏட்டில் நான் கூறியு ள்ள ஒவ்வொன்றும் ஆர்வமிக்க மன்றாட்டாகத் தொடர் ந்து மாற்றப்படவேண்டும் இன்றைய உலகில் மனித னின் தேவைகளுக்கு ஏற்ப இரக்கத்தை வேண்டும் குரலாக மாற்றப்படவேண்டும். திருமறை நூலிலும் திருச்சபை மரபிலும், தலைமுறை தலை முறையாக வரும் எண்ணற்ற இறைமக்களின் உண்மையான விசுவாசவாழ்விலும் சொற்றிறம் கண்ட இரக்கம் பற்றிய உண்மையை முழுமையாக இக்குரல் வெளியி டட்டும் இவ்வாறு குரல் எழுப்பி திரு (மறைநூல்) ஆசிரியர்கள் போன்று கடவுளைக் கூவி அழைப்போம். ஏனெனில்தாம் படைத்தவற்றுள் எதையும் அவர் அருவருத்துத்தள்ளுவதில்லை. அவர் தமக்கும் தம் தந்தைமைக்கும் அன்புக்கும் பிரமாணிக்கம் உள்ளவர், இறைவாக்கினர்போன்று, தாய்க்குரிய சிறப்பியல்புகள் கொண்ட அந்த அன்பை நோக்கி அறைகூவல் எழுப்புவோம் தாயைப்போன்றுதன் பிள்ளைகள் ஒவ்வொருவரையும் பின்செல்கின்ற அன்பை காணாமற் போன ஆடுகள் ஒவ்வொன்றையும் தேடிச் செல்லும் அன்பைக் கூவி அழைப்போம் காணாமறபோன ஆடுகளின் எண்ணிக்கை பல கோடிகளைத் தாண்ட நேரிட்டாலும் - இந்த உலகிலே தீமை நன்மையை பெற்றுக் கொள்ள நேரிட்டாலும் - அன்றொரு நாள் நோவாகாலத்து மக்கள் செய்ததுபோல, இன்றைய மக்கள் தங்களது பாவங்கள் பொருட்டுப் புதியதொரு வெள்ளப் பெருக்குக்த் தங்களையே தகுதியாக்கிக்கொள்ள நேரிட்டாலும் - அந்த அன்பை வேண்டிநிற்போம். கிறிஸ்த்து தமது மீட்புப் பணியில் நமக்கு வெளிப் படுத்திய தந்தைக்குரிய அன்பின் - அவரது சிலுவைப்பாடுகள், இறப்பு உயிர்ப்பில் தன் சிகரத்தை அடைந்த அந்த அன்பின் துணையை நாடுவோம் தலை முறை தமைுறையாய் உளதாமே என்று இரக்கம் பற்றி மரியாள் தன் புகழ்ச்சிப் பாடலிலல் அறிக்கையிட்ட சொற்களை நினைவில் கொண்டவர் களாய் கிறிஸ்த்து வழியாக இறைவனின் துணையை நாடுவோம்: நமது தலை முறைக்காக இறைவனின் இரக்கத்தை இறைஞ்சுவோம். மரியாளின் மாதிரியைப் பின்பற்றி மனிதகுலத்தின் அன்மீக அன்னையாகத் திகழ முனையும் திருச்சபை தனது தாய்க்குரிய அக்கறையை இம்மன் றாட்டு மூலம் வெளிப்படுத் தட்டும் அதே நேரத்தில் தனது பற்றுநிறை அன்பை – செபம் செய்வதற்கான உடனடித்தேவையை உண்டாக் குகிற அன்பை-வெளிப் படுத்தட்டும்.

கிறிஸ்த்து நம் இதயங்களில் பதித்திருக்கும் விசுவா சம், நம்பிக்கை, அன்பு ஆகியவற்றால் உந்தப்பட்டு, நமது விண்ணப்பங்களைச் சமர்ப்பிபோம். மேற்கூறிய மன நிலை இறைவன்பால் நாம் கொள்ளவேண்டிய அன்பையும் தன்னுள் அடக்கும். சில வேளைகளில் இந்த இறைவனைவிட்டு இன்றைய மனிதன் வெகுதூரம் சென்று விடுகிறான். தனக்குப் புறம்பானவராக அவரைக் காண்கிறான்: அவர் தேவைப்படாதவர் என்று பலவாறு அறிக்கையிட்டுள்ளான். இறைவன் நம்மீது காட்டும் அன்பு இதுதான்: ஆனால் இன்றைய மனி தனோ அவரை ஏளனம் செய்து ஒதுக்கிவைக்கிறான் என்பதை நாம் ஆழமாக உணர்கிறோம். எனவேதான் சிலுவையில் தொங்கிய கிறிஸ்துவோடு சேர்ந்து. "தந்தையே. அவர்களை மன்னியும். ஏனெனில் தாங்கள் செய்கிறது என்னதென்று. அவர்களுக்குத் தெரியவில்லை என்று குரலெழுப்ப நாம் தயாராக இருக்கிறோம். அதே நேரத்தில் இம்மன நிலை மக்கள் மட்டில் நாம் கொள்ளவேண்டிய அன்பையும் உள்ளடக்கும்: இது எந்தவித விதிவிலக்கோ பிரிவினையோ ஏற்படுத்தாமல் ஆண், பெண் அனைவரையும் உள்ளடக்கும் அன்பு - இனம். பாண் பாடு, மொழி, கொள்கைக் கண்ணோட்டம் முதலிய வேறுபாடுகள் அறியாத அன்பு - நண்பர் - பகைவர் என்ற வேறுபாடு பாராட்டாத அன்பு இதுவே: ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு மனித குழுவுக்கும் ஒவ்வொரு குடும்பம், நாடு சமூகக் குழுவுக்கும் இளைஞர், முதியோர், பெற்றோர், வயோதிகர் ஆகிய அனைவருக்கும் எந்தவித விதிவிலக்கும் இன்றி எல்லா உண்மை நலன்களும் கிடைத்திடவிழையும் அன்பு இதுவே. எல்லாவித உண்மை நலன்களையும் மனிதர் ஒவ்வொருவருக்கும் உறுதிப்படுத்தவும், எவ்விதத்தீங்கையும் அகற்றித் துடைத்திடவும் மனிதர் கொள்ளும் ஆர்வம் முள்ள அக்கறையே இந்த அன்பு.

கிறிஸ்துவின் பணியாளர் என்ற முறையிலும், என்னை வழிநடத்தி, வரலாற்றின் இக்காலக்கட்டத்தில் மனித இனத்துக்காக இறைவனுடைய இரக்கத்தை மன்றாடத் தூண்டும் விசுவாசத்தையும் நம்பிக்கையும் இக்கால மனிதருள் யாரேனும் பகிர்ந்துகொள்ளா திருந்தால். எனது அக்கறைக்கான காரணத்தை யாவது புரிந்துகொள்ள அவர்கள் முயற்சி செய்ய ட்டும். இக்கால மனிதர் பலரின் உள்ளுணர்வுக்கு ஏற்ப மனிதர்பாலும், மனிதப் பண்பு சாாந்த அனைத்தின் பாலும் எழும் அன்பு பேரிடர்களால் அச்சுறுத் தப்பட்டு வருகிறது என்பது உண்மையே, எனினும், மேற்கூறிய அன்பால் துண்டப்பட்டதே திருச்சயையின் அக்கறை. மனிதன் உயரிய அழைப்பை நமக்கு வெளிப்படுத்துகிறது கிறிஸ்துவின் மறைபொருள்தான் மனிதனுடைய ஈடிணையற்ற மாண்பை வழியுறித்தி இரக்கத்தை இறைவனின் இரக்கமிகு அன்பு என்று அறிக்கையிடவும் இதுவே நம்மைக் கடமைப்படுத்து கிறது. அது போலவே அந்த இரக்கத்தின்துணையை நாம் நாடவும்- இருபத்தி யொராம் நூற்றாண்டின் இறுதிக்கட்டத்தை நெருங்கிக்கொண்ருக்கும் இவ்வே லையில், திருச்சபையினுடையவும் உலகினுடையவும் வரலாற்றின் கடினமான, நெருக்கடியான கட்டத்தில் அதை இரந்து மன்றாடவும் மேற்கூறிய மறை பொருள்தான் நம்மைத் தூண்ட வேண்டும்.

சிலுவையில் அறையப்பட்டு உயிர்த்தெழுந்த இயேசு கிறிஸ்த்துவை பெயராலும், மனித வரலாற்றில் நீடித்து நிலைநிற்கும் அவருடைய மீட்புப் பணியில் விளங்கிய மன நிலையோடும் நாம் குரல் எழுப்பி மன்றாடுகின்றோம், இறைத் தந்தையில் இருக்கும் அன்பு வராலாற்றின் இக்கட்டான இக்கட்டத்தில் மீண்டும் ஒருமுறை வெளிப்படுத்தப்படவேண்டும் என்று மன்றாடுகிறோம், திருமகன், தூயஆவியின் செயல்கள் வழியாக, நாம் வாழும் இன்றைய உலகில் அந்த அன்பு குடிகொண்டிருக்கிறது என்பதைப்பிறர் கண்டு கொள்ள வேண்டும் என மன்றாடுகிறோம். அந்த அன்பு தீமையை விட அதிக ஆற்றல் படைத்தது: பாவம், சாவை, விட அதிகசக்தி வாய்ந்தது என்பதை எல்லோரும் உணர்ந்திடவேண்டும் என மன்றாடுகிறோம். "அவர் தம் இரக்கம் தலைமுறை தலை முறையாய் உளதாமே" என்று இடையறாது பாறை சாற்றிக்கொண்டிருக்கின்ற மரியாளின் பரிந்துரை வழி யாகவும், "இரக்கமுடையோர் பேறுபெற்றோர், ஏனெனில் அவர்கள் இரக்கம்பெறுவர்" என்ற மலைப் பொழிவின் கூற்றும் தம் வாழ்வின் ஏற்னெவே முழுமை எய்தியதை அனுபவித்து உணர்ந்தவர்களின் பரிந் துரை வழியாகவும் இக்க ருத்துகாக மன்றுடுவிறோம்.

திருச்சபையின் தன்னிறைவாக்கத்தில் (self-realiza tion) புதியதொரு கட்டத்தை நமக்குக் காட்டுகின்ற இரண்டாம் வாத்திக்கான் சங்கத்தின் முடிவுகளை, நாம் வாழ்கின்ற சகாப்தத்திற்கு ஏற்பச் செயலாக்கும் பெரும் பணியைத் திருச்சபை தொடரவேண்டும். இப்பணியை ஆற்றும்பொழுது எந்த ஒரு காரணத்தைக் கொண்டும் திருச்சபைதனக்குள் அடைபட்டுக்கிடக்கக் கூடாது என்ற முழு உணர்வினால் அது தொடர்ந்து வழி நடத்தப்படவேண்டும். திருச்சபை இருப்பதே கடவுளை வெளிப்படுத் துவதற்காகத்தான்: அதாவது, தம்மையே கிறிஸ்த்துவில் காணும் பேற்றினை நமக்கு அளித்துள்ள தந்தையை வெளிப்படுத்துவதற் காகத்தான். மனித வரலாற்றின் எதிர்ப்பு எவ்வளவு தான் அதிகமாக மறுத்தாலும், அவற்றை எல்லாம் விட அதிக மறைந்திருந்து, பின்னர் இயேசு கிறிஸ்த்து வழியாக ஒரு குறிப்பிட்ட இம்மறைபொருளோடு நாம் நெருங்கிப் பிணைந்திருக்கவேண்டும்.

**திரு தோமாஸ் டேவிட் மறை பணியாளன் ("அன்புமக்களே" நிர்வாக ஆசரியர்)**

# கிறிஸ்தவர்களே விழிப்பாயிருங்கள்!.

இன்று புலம் பெயர்ந்து வாழும் நமது இலங்கை நாட்டு கிறிஸ்தவர்கள் மத்தியில் இருக்கும் பெரிய தொரு சவால் நமது விசுவாசத்திற்கு எதிரான சோதனைகள். விஷேசமாக கத்தோலிக் கிறிஸ்தவர்கள் தாங்கள் பெற்றுக்கொண்ட கொடையாகிய விசுவாசத்தை இழந்து, வீட்டுக்கு வீடாக முளைத் திருக்கின்ற தற்காலிக சபைகளில் சேர்ந்து கொள் வதும். தாங்கள் சேர்ந்து கொள்வதுமட்டும் அல்ல, பிரமாணிக்கமாக வாழ்கின்ற கத்தோலிக்க மக்களையும், தங்களுடைய அறியாமைக்குள் இழுப்பதுமாகும். கிறிஸ்தவ வாழ்க்கையானது கிறிஸ்துவின் விழுமியங்களின்படி வாழ் வதும், கிறிஸ்துவைப்பின் பற்றுவதும், இறைவார்த் தையை எங்கள் வாழ்வாக்குவதும் தான். இதைவிடுத்து இறை வார்த்தையை இன்று வான்முறைக்கும். அடுத்தவர்கள் மேல் பிழை கண்டு பிடிப்பதற்கும் பயன் படுத்துகின்றனர். இறை வார்த்தையை மேற்கோள்காட்டி கத்தோலிக்க விசுவா சிகளை சபிக்கப்பட்டவர்கள் எனவும், அர்ச்சிக்கப்பட்ட வர்கள் அல்ல என்று தீர்ப்பிடவும் வேதாகம புனித வார்த் தைகளை பயன்படுத்துகிறார்கள். தங்கள். தங்கள் சகோதர சகோதரிகளை இவ்வாறு தீர்ப்பிடுவது கிறிஸ்துவின் வார்த் தையாகிய "பிறர் குற்ற வாளிகள் என்ற தீர்ப்பு அளிக் காதீர்கள்: அப்போது தான் நீங்களும் தீர்ப்புக்கு உள்ளாக மாட்டீர்கள்" (மத்:7.∵.1-5: லூக்: 6.∵.37-38,41-42) ஆகிய இறை வார்த்தைக்கு எதிரான செயல் என்பதை மறந்து செயல்படு கிறார்கள்.

வேதாகமத்தை உலகிற்கு கொடுத்தது கத்தோலிக்க திருச்சபையே. ஆதிக் கிறிஸ்தவர்கள் ஏற்றுக்கொண்ட முழு வேதாகமத்தை (Septuagint) இன்றைய கத்தோலிக்க திருச்சபையே பாதுகாக்கின்றது. இதை விடுத்து மத்திய காலத்தில எதிர்பாளர்களினால் கொண்டுவரப்பட்ட அதாவது வேதாகமத்தின் சில புத்தகங்களை நீக்கிவிட்டு சில சொற் களை மாற்றி அறிமுகப்படுத்தப்பட்ட வேதாகமத்தேயே இன்று பிரிந்து போன சபைகளை சேர்ந்தவர்கள் பயன் படுத்துகிறார்கள். முழுமையான வேதாகமத்தில் பழைய ஏற்பாட்டில் இருக்கும் 46 புத்தகங்களுக்கு பதிலாக 7 புத்தகங்களை நீக்கி விட்டு 39 புத்தகங்களைக்கொண்ட குறைவான புத்தக அமைப்பைக் கொண்ட வேதாகமத்தை பயன் படுத்தி இறை வார்த்தையின் முழுமைக்கு களங்கம் விளைவிக்கிறார்கள்.

வேதாகமம் எழுதப்பட்டதின் நோக்கம் எமது மீட்பின் வரலாற்றை நாம் அறியவும் அதன் வழியாக கடவுள் நம் மேல் கொண்ட அன்பை நாம் அனுபவிக்கவும்தான். இறை வார்த்தை எங்கள் வாழ்விற்கு ஒளி -- அந்த ஒளியில் நாம் வாழவேண்டும். இதை விடுத்து அதிகாரங்களையும், வசனங் களையும் மனப்பாடம் செய்வதில், அவற்றைக்கொண்டு அடுத்த வர்களை குற்றம் சாட்டுவதில், உங்கள் சகோதர, சகோதரிகளை, எள்ளி நகையாடிக்கொண்டும், இறை சேவையை வியாபாரமாக்கிக்கொண்டும், வெளிவேட இன் றைய பரிசெயர்களாக இந்த சபைகள் வாழ்கின்றன. இந்த சபைகள் வேதாகமத்தை பயன் படுத்துகிறார்களே தவிர, இவர்கள் கிறிஸ்தவர்கள் அல்ல. எனெனில் கிறிஸ்துவின் வழியில் இவர்கள் வாழ்வதில்லை. கிறிஸ்துவின் நற்செய்தி யைக்கொண்டு சுய இலாபம் அனுபவிக்கிறர்கள். நமது சொந்த தனிப்பட்ட திருப்திக்காகவும் தமது சுய விருப்பத்தை, நிறைவேற்றுவதற்கு பதிலாக, தாங்கள் நினைத்த வழியில் கிறிஸ்துவினால் உண்டாக்கப்பட்ட ஒரே, பரிசுத்த, கத்தோலிக்க, அப்போஸ்தொலிக்க, திருச் சபையை விட்டுப்பிரிந்து, தங்கள் மனம் போனபோக்கில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

இறை வார்த்தையை இவர்கள் உண்மையாவே கடைப்பிடிக்க ஆர்வம் கொண்டவர்களாக இருந்தால் கிறிஸ்துவை அறியாத இந்துக்கள், இஸ்லாமியர்கள், ஏன் கடவுள் இல்லை என்று சொல்லுகின்ற நாஸ்திகர்களுக்கு கிறிஸ்துவை எடுத்து கூறி கடவுளுக்காக வாதிடலாமே! உங்கள் உயிர் போனாலும் பரவாயில்லை, கிறிஸ்து வுக்காக மரிக்கலாமே! இதையெல்லாம் விட்டுவிட்டு கிறிஸ் துவை அறிந்து, அவர் வழியில் வாழ்கின்ற கத்தோலிக் கர்களை ஏன் குழப்புகிறீர்கள்? உங்களிடம் உண்மை இருந்தால் உண்மையை அறியாதவர்களிடம் போய் சொல்லுங்கள். இவர்கள் ஏன் கத்தோலிக்கர்களிடம் வருகிறார்கள் என்றால் கிறிஸ்துவை சோதித்த சாத்தான், கிறிஸ்து உருவாக்கிய தாய் திருச்சபையை துன்புறுத் துவதற்கும், அழிப்பதற்கும் கடந்த 2000 இற்கும் மேலான வருடங்களாக முயற்சிக்கும் சாத்தான் இன்று சபைகள் மூலமாகவும், சபைகளைச் சார்ந்த ஆட்டம் காணும், உறுதியில்லாத, சில மனிதர்கள் மூலம் திருச்சபையை துன்புறுத்துகிறான். இவர்களின் இந்த செயல் இறுதிவரை வெற்றி பெறப்போவது இல்லை. ஆகவே அன்பார்ந்த கத்தோலிக்க கிறிஸ்த்தவர்களே! இவர்களின் வெளி வேடத்தில் ஏமாந்து போகாதீர்கள்!

கிறிஸ்து ஏற்கனவே எச்சரித்தது போல உலகம் முடிவில் "இதோ மெசியா இங்கே இருக்கிறார்! அதோ அங்கே இருக்கிறார்! எனச்சொன்னால் நீங்கள் நம்பவேண்டாம்" (மத்தே24.∵.23:மார்க்13.∵.21: லூக் 17.∵.23). அதேபோல இந்த சோதனைகளில் இருந்து தப்பித்துகொள்ள தைரியமாய் இருங்கள். கத்தோலிக்க திருச்சபையை குறை கூறி, குழப்ப நினைக்கும் எனது அன்பார்ந்த சகோதர, சகோதரிகளைப் பார்த்து நான் கேட்கின்றேன். நீங்கள் உண்மையாக இறைவார்த் தையை உங்கள் வாழ்வில் கடைப்பிடிக்க முயற்சிப் பவர்களாக இருந்தால் நமது சமுதாயத்தில் நிகழ்ந்த சீர்கேடுகளுக்கு எதிராக குரல் கொடுங்கள். கிறிஸ்து அன்று சமுதாயத்தில் நிகழ்ந்த சீர்கேடுகளுக்கு எதிராக குரல் கொடுத்தார். தண்டித்தார், அதற்காக சிலுவையில் அறையப்பட்டு மரணித்தார். இன்று நடக்கும் பல சமுதாய சீர்கேடுகளை கண்டித்து எத்தனைபேர் சிறை செல்ல ஆயத்தமாக இருக்கிறீர்கள். கருச்சிதைவு (Abortion) மணமுறிவு (Divorce) பல திருமணங்கள் (Multiple Partners). திருமணத்திற்கு முன்பாகவும், புறம்பாகவும் உள்ள பாலியல் உறவுகள் (Adultary). கருணைக்கொலை (Ethanesia), ஒரு பால் திருமண ங்கள் (same-sex union), செயற்கை முறையான குடும்பக்கட்டுப்பாடு (Contraceptives), பாலியல் துயரப்

படங்கள் (pornography), பள்ளிகளில் குழந்தைகளுக்கு பாலியல் கல்வி (sex-education), ஆகிய சீர்கேடுகளை இறைவார்த்தையின் அடிப்படையில் கண்டியுங்கள். தட்டிக் கேளுங்கள், குரல் கொடுங்கள். வீதிகளில் இறங்கி ஆர்ப்பாட்டம் செய்யுங்கள், வெளிப்படையாக கிறிஸ்துவை உலகிற்கு அறிவியுங்கள். முதலில் உங்கள் குடும்பங் களிலும், பிள்ளைகளிலும் இந்த சீர்கேடுகள் இருக்கின் றனவா என்று பாருங்கள். கூட்டமாக சேர்ந்து கத்துவதிலும், அல்லேலூயா பாடுவதிலும் கத்தோலிக் கர்களின்மேல் குறை கண்டுபிடிபதிலும்தான் கிறிஸ்தவ வாழ்வு தங்கியிருக்கின் றது என்று நினைத்து ஏமார்ந்து போகாதீர்கள். என்னை நோக்கி, "ஆண்டவரே ஆண்டவரே, எனச் சொல்பவர்கள் எல்லாம் விண்ணரசுக்குள் செல்வதில்லை. மாறாக விண்ணு லகில். உள்ள என் தந்தையின் திருவுளத்தின் படி செயல் படுபவரே செல்வர்"(மத்தே7.:.21 லூக் 6.:.46) என்ற இறைவார்த் தையை மறந்துவிடாதீர்கள்.

கிறிஸ்துவினால் ஆரம்பிக்கப்பட்ட ஒரே திருச்சபை புனித பேருதுவினாலும் (மத்19.:.16) அவர் வழிவந்த திருத்தந்தை யர்களினாலும் வழி நடத்தப்பட்டு வருகின்ற கத்தோலிக்க திருச்சபையே இந்த புனிதமான திருச்சபைக்கு எதிராக செயல்படுபவர்களும், கிறிஸ்த் துவின் மந்தையில் பிரிவினை ஏற்படுத்திகிறவர்களும். குழப்பம் விளைவிக்கிறவர்களும் கிறிஸ்ததுவின் மந்தையில் பிரிவினை ஏற்படுத்துகிறவர்க ளும், குழப்பம் விளைவிக்கிறவாளும் கிறிஸ்துவிற்கு எதிராக செயல் படுகிறார்கள், இவர்களைப் பற்றித் தான் கிறிஸ்து யோவான் நற்செய்தி 10.10 இல் குழப்புவதற்கு வருவார்கள் வருவார்கள் என்று கூறுகின்றார். புனித பவுல் அடிகளாரின் காலத்திலும் பலபேர் பவுலின் போதனை தவறு என்று செல்லி கிற்ஸ்தவர்கள் மத்தியில் குழப்பத்தை உண்டு பண்ணினார்கள். எனவே குழப்பம் விளைவிப்பவர்கள் கத்தோலிக்க திருச்சபையின் வரலாற்றில் புதியவர்கள் அல்ல. வரலாற்றில் பலபேர் முன்வந்தார்கள். குழம்பினார் கள். இறுதியில் அவர்களே குழம்பிப் போனார்கள். சில காலங்களுக்குப் பின் அவர்கள் காணாமல் போய்விட்டார்கள். அதேபோல இன்று குழப்புகிறவர்களும் தங்களையே தலைவராக்கி கொள்கிறவர்களும் தங்களைப் போதகர்கள் என்று கூறிக்கொள்கிறவர்களும் சிலகாலங்களுக்குப்பின் காணாமல் போய்விடுவார்கள். ஆனால் பாறையின்மேல் கட்டப்பட்ட கத்தோலிக்க திருச்சபை என்றும் இளமைச் செழிப்புடன் சிறந்தோங்கும .சபைகளைச் சேர்ந்தவர்களும மக்களை வழிநடத்துவதாக காட்டிக்கொள்ளும் போதகர் களும் வீதிகளில் உணவின்றி இருக்கும் பிச்சைக்காரர் களையும். வீடு இன்றி அவதிப்படுபவர்களையும். போதை வஸ்துக்கு அடிமையானவர்களையும் தங்கள் வீடுகளில் ஏற்றுக் கொள்வார்களா? தங்கள் வீடுகளில் அவர்களை அழைத்து தங்களது உணவு மேசைகளில் உணவு பரிமாறுவார்களா?

கிறிஸ்து வாழ்வு மழைப் பொழிவிலும் (மத்தேயு :5.6 அதிகாரங்கள்)இறுதி தீர்வையிலும் (மத்தேயு:25 அதிகாரத் திலும்) கிறிஸ்து கூறிய அறிவுரைகளில் தான் தங்கியிருக் கின்றது. அதை விடுத்து வேதாகமத் தைப் பற்றிய குறைந்த அறிவுடன் கிறிஸ்துவுக்கு பிரமாணிக்கமாக வாழ்கின்ற கத்தோலிக்க கிறிஸ்த்தவர் களை குழப்பாதீர்கள். கூச்சல் போடாதீர்கள். நற்செய்தியை வாழ்வாக்குங்கள். கிறிஸ்துவை அறியாதவர்களுக்கு நற்செய்தி சொல்லுங்கள். வாழ்வின் சவால்களை எதிர்கொள்ளுங்கள். உங்கள் உயிரை, வாழ்வை, கிறிஸ்துவுக்கு அர்ப்பணம் ஆக்குங்கள்.

கத்தோலிக்க கிறிஸ்தவர்களே விழிப்பாயிருங்கள்! உங்கள் விசுவாசத்தைப்பற்றி யாராவது கேள்வி கேட்டால் தகுந்த பதில் கொடுக்க தயாராக இருங்கள் (1பேதுரு 3.:.15-16). ஆற்சிக்கப்பட்டவர்கள் -- அர்ச்சிக்கப் பட்டவர்கள் தான். யாராவது இதற்கு எதிராக சொன்னால் அவர்களை நம்பாதீர் கள். குத்தோலிக்கர்களாக திருமுழுக்கு பெற்று வழிதவறி சென்றவர்கள் மனம்மாறி தாய் திருச்சபையிடம் ஒருநாள் வரவேண்டும் என்று செபம் செய்யுங்கள்.

கிறிஸ்த்து சிலுவையில் மன்னிப்பு கொடுத்தார் (லூக் 23.:.34) மீட்பு கொடுத்தார் (லூக் 23.:.42) அதன்பிறகு எல்லாம் நிறைவேறிட்டு என்று அறிந்து தந்தையின் கரங் களில் தன் ஆவியை கையளித்தார் (லூக்23.:.46). நாமும் மன்னிப்போம், மீட்படைவோம் ஆண்டவரின் சித்தத்தை எங்கள் வாழ்வில் நிறைவேற்றுவோம். ஆகங் காரம் ஒரு தலையான பாவம். இதுதான் இன்று பலரை ஆட்டிப்படைக்கின்றது. தாழ்மை யுடன் எங்கள் அறியாமையை ஏற்றுக்கொல்கின்ற பொழுது மனமாற்றம் கிடக்கின்றது. தந்தையிடம் திரும்பி வந்த உதாரிமகன் போல நாமும் திரும்பி வருவோம். இரக்கம் பெறுவோம், மீட்படைவோம்.

**Rev.Fr. Francis Jeyaseelan CR. MCL. JCL**

**Missionary of Mercy.**

# மீட்பின் அன்னை மறைத்தலம்

மொன்றியலில் வாழும் தமிழ் கத்தோலிக்க மக்களின் மீட்பின் அன்னை மறைத்தலத்தில் ஆடி 17ம் திகதி திருப்பலியில் மேதகு யாழ் ஆயர் ஜஸ்ரின் ஞானப்பிரகாசம் அவர்கள் பங்கு கொண்டு சிறப்பித்து பங்கு மக்களுக்கு வழங்கப்படும் உறுதிபூசுதல் அருட்சாதனத்தை தலை ஏற்று நிறைவேற்றுவார்.

அத்துடன் மீட்பின் அன்னை மறைத்தலத்தில் ஆவணிமாதம் 06ம் திகதி சனிக்கிழமை 6.30 மணிக்கு மருதமடு அன்னையின் திருவிழா திருப்பலியும் திரு சுரூப சுற்றுப் பிரகாரமும் நடைபெறுகிறது அத்தருணம் அனைத்து தமிழ் மக்களையும் பங்கு பற்றி சிறப்பிக்குமாறு பங்கு மக்களும் பங்குத் தந்தையும் அன்புடன் அழைக்கிறார்கள்.
அருட்தந்தை .யூட் நீக்ஷன் 1-514-298-2076

# புனிதர்களுக்கு வணக்கம்

புனிதர்களுக்கு செலுத்துகின்ற வணக்கத்தைப்பற்றி முழுமையாக விளங்கிக்கொள்ள சில முக்கிய பொது வான கோட்பாடுகளைப்பற்றி முதலில் அறியவேண்டும். அவையாவன: 1. திருச்சபை என்றபதம்: உலகத்தில் வாழும் கத்தோலிக்க கிறிஸ்த்தவர்களை மட்டும் குறிக்கின்ற ஒரு பதம் அல்ல திருச்சபை என்றபதம் : உலகத்தில் வாழும் கத்தோலிக்க கிறிஸ்தவர்க ளைக் குறிக்கும்: மகிமை அடைந்த விசுவாசிகள், பயணம் செய்யும் விசுவாசிகள், துன்புறும் விசுவாசிகள், இந்த மூன்று வகைகளில் சேர்ந்தவர்கள் ஒருவருக் கொருவர் உறவுகொண்டவர்கள். இவர்கள் எல்லோரும் மனிதர் களே, ஒரே திருச்சபையை சார்ந்தவர்கள். ஒருவ ருக்கொருவர் உதவி செய்யக்கூடியவர்கள்.

2. கடவுள் வாழ்வோரின் கடவுளே அன்றி இறந்தோ ரின் கடவுள் அல்ல, (மத் 22.∴32மார்ச் 12.∴27 லூக் 20.∴38ரோமன்: 14.∴8தி.வெ:7.∴15-17)

3.புனிதர்கள் விசேசமாக அன்னை கன்னிமரியாள் எலிலோரும் மனிதர்கள் தெய்வங்கள் அல்ல

4. மனிதர்களாக திருச்சபையின் உறுப்பினர்களாக வாழ்கின்ற புனிதர்கள், நாம் உலகில் வாழும்போது ஒருவருக்கொருவர் உதவி செய்வது போன்று அவர்க ளும் அவர்களுக்கு உதவி செய்யலாம்.

5. வேதாகம வெளிச்சத்தில் இறப்பு என்றால் கிறிஸ்த்துவில் இருந்து முற்றாக பிரித்து நரகத்துக்கு சென்றவர்களே. மற்றவர் எல்லோரும் மண்ணுலகை விட்டுப்பிரிந்தாலும் கிறிஸ்துவில் வாழ்கிறவர்களே, வாழ்வு மாறுகின்றதே அன்றி அழிக்கப்படுவதில்லை (மத்தேத.25.∴42 25.∴46 யோவா 3.∴36 இரோம 1.∴24 5.∴12)

6. உலகத்தை விட்டு பிரிந்தாலும், அவர்கள் திருச் சபையின் உறுப்பினர்கள். அம்மகிமையின் உறுப்பினர் களாக திருச்சபையை சார்ந்தவாகளாகவே இருக் கின்றனர்.

7. இயேசுவோடு. இயேசு வழியாக, இயேசுவில் தான் அவர்கள் அற்புதங்கள் செய்கின்றனர்.

எந்த புனிதருக்கும் தன்னிலையில் போதுமானவர் கள் அல்ல அவர்கள் கடவுளின்நெஞ்சத்திற்கு நெருக் கமானவர்கள். புனிதர்கள் வழியாக இறையருள் வெளி ப்படுகிறது. கிறிஸ்தவ வாழ்வு என்பது அவரைச் சார்ந்துதான் நாம் வாழ்கின்றோம், இயங்குகின்றோம்: இருக்கின்றோம் (தி.ப17.∴28) என்ற மனநிலை. புனிதர் கள் இறையடியார்கள், இறைவனை மிக அதிகமாக நேசித்தவர்கள்: பாவங்களை வெறுத்து புனிதத் தில் சிறந்தவர்கள். எனவே எந்த புனிதரும் தன்னை உயர்த் திக்கொண்டவர்கள் அல்ல, மரியாளைப்போன்று "அவர் சொல்லுவது போல செய்யுங்கள்" (யோவா ண்:1.∴5) என்று இயேசுவை முன்னிலைப் படுத்தும் மாமனிதர்கள், இவர்கள் இயேசுவின் பெயரால் அனைத்தையும் செய்ப வர்கள். நம்பிக்கைக் கொண்ட இந்த புனிதர்கள் இயேசு வின் பெயரால் அரும் அடையாளங்களை செய்வர். அவர்கள் இயேசுவின் வல்லமையுள்ள பெயரால் பேய் களை ஓட்டுவார், பாம்புகளைத் தம்கையால் பிடிப்பார். நஞ்சு, குடித்தாலும் சாகமாட்டார், உடல் நலமற்றோர் மீது தம் கைகைளைவைத்து சுகம் கொடுப்பார் (மார்க்: 17.∴17: யோவண்14.∴12) தி.ப3.∴6 இல் உடல் நலமற்றோர் மீது தம் கைகளை வைத்து சுகம் கொடுப்பார் (மாக்க் 16.∴17யோவான் 14.∴12) தி.ப. 3.∴6 இல் பேதுரு "இயேசுவின் நாமத்தில் எழுந்து நடந்திடும்" என்றுகால் ஊனமுற்றவனை நடக்கவைக்கிறார் மேலும் (தீ.ப.5?12.15 இல் பேதுருவின் நிழல் சிலர் மேலாவது படுமாறு மக்கள் உடல் நலமற்றோரை கட்டில்களிலும், படுக்கைகளிலும், கிடத்தி சுமந்து கொண்டு வந்து வீதிகளில் வைத்தார்கள் தீ.ப 19.∴12 இல் பவுல் வழியாக கடவுள் அரும் பெரும் வல்ல செயல்களை செய்தார்கள் அவரது உடலில் பட்ட கைக்குட்டைகளையும், துண்டுகளையும், கொண்டுவந்து நோயுற்றோர் மீது வைத்தும் பிணிகள் அவர்களை விட்டு நீங்கும் என்று வாசிக்கின்றோம்.

புனிதர்களிடம் செபிப்பது என்பது இயேசுவின் ஆற்றலை, அவரது சுகத்தை பெற்று கொள்ள உதவும் எல்லா புனிதரும் "இயேசுவின் நாமத்தைகொண்டு நான் செயல்படுகிறார்களே ஒழிய தமது பெயரால் அல்ல அன்னை மரியாள் வழியாகச் செய்ப்படும் எராளமான அற்புதங்கள் எல்லாம் இயேசுவின் பெயரால் செய்யப்படும் அருள் வரங்கலே. இவ்வாறு மனித வாழ்வில் அசாதாரண மாய் இறையருளால் புனிதமாய் வாழ்ந்தவர் களை மாதி ரியாக் கொள்பவரும். மேல் வரிச்சட்டமாக வைத்துக் கொள்வதும், இறைவனும் ஒன்றித்திருக்கும் அவர்களிடம் செபிப்பதும் தவறான ஒன்றல்ல.

இதனை முதன் முதலாக கி.பி மூன்றாம் நூற்றாண் டில் வாழ்ந்த ஒளியின் (முசபைநெ) என்கின்ற இறையியல் அறிஞர் இவ்வாறு கூறினார். எல்லா புனிதரிட மும், மரியாளிடமும் நாம் வேண்டிக்கொள்ள கேட்கின் றோமே தவிர அருள் தாரும் என்று அவர்களிடம் கேட்பதில்டலை அழைக்கப்பட்டவர்கள் அல்லது தேர்ந் தெடுக்கப்பட் டவர்களின் முடிவு கிறிஸ்துவின் மகிமை யில் பங்கு பெருவாதாகும் மரியாள் கடவுளின் தாய் என்ற வகையில் தலை சிறந்தவர்களுள் முதலிடம் பெற்றவர்களாக இருக் கிறார் எல்லா புனிதர்களும் குறிப்பாக மரியாள் நம் அனைவரையும் கடவுளிடம் அழைத்துச் செல் லும் கருவிகளாகவே இருக்கின்றனர் நமக்காக அவர்கள் வேண்டிக்கொள்கிறார்கள், (காண்க, மத்தே 18.∴19)

கொடுப்பவர் இறைவன் இதுதான் உண்மை. மற்ற எல்லா விதமான விளக்கங்களுக்கும் பொய்யானவை ஆதி கிறிஸ்தவர்களின் வாழ்கை முறைக்கு மாறானவை இடையில் வந்த குழப்பக்காரர்களினால் கிறிஸ்தவர்களின் வாழ்க்கையில் புகுத்தப்பட்டவைகள் ஆனால் மிகைப் படுத்தும் வணக்கம் தவிர்க்கப்படவேண்டும். மரியாள் புனிதர்களை கடவுளாக்கிவிடவும் கூடாது. அவர்களை மரியாதை குறைவாக மாற்றிவிடவும் கூடாது. கடவுளுக்குரிய இடத்தை மரியாளுக்கும், புனிதருக்கும்' தரும் போக்கில் அமைந்துவிடவும் கூடாது என்று கத்தோலிக்க திருச்சபை எச்சரிக்கிறது இந்த எச்சரிக்கையை மிகுந்த கவனத்தோடு மனதில் நிறுத்த வேண்டும் மரியாவுக்கும் புனிதர்களுக்கும் கொடுக்கப்படும் வணக்கம் பக்தி முயற்சிகள் அவர்களைக் கடளாக்கி விடாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும் இந் எல்லா பக்தி முயற்சிகளும் நம்மை கடவுளிடம் அழைத்து செல்லும் வழிகாட்டிப் பலகையாக இருக்க வேண்டும்

ஒவ்வொரு மனிதனின் தனிப்பட்ட ஆசை தன்னையே முழுமையாக கடவுளுக்கு கொடுப்பது அவ்வாறு கொடுக்க முடியாதபோது மனித உருவ மாகவோ அல்லது அவயவங்கலாகவோ, வழிபாட்டுக்கும் வணக்கத்திற்கும் உரிய வேறுபாட'டை உணர்ந்த வர்களாக காணிக்கை கொடுப்பதில் தவறில்லை

தொ.நூ 3.'.15 இல் கூறப்படுவது போல் உனக்கும் பெண்ணுக்கும் உன் வித்துக்கும் அவன் வித்துக்கும் பகையை உண்டாக்குவேன் என்ற கூற்றின்படி மரியாளுக்கும் சாத்தானுக்கும் இடையே உள்ள பகைமை விளங்குகின்றது. மரியாள கிறிஸ்து வழியாக பாவத்தை வென்றாள் இதன் மூலம் சாத்தானையும் அவள் வென்றான்

புனிதர்கள் மனிதர்களாக இருக்கின்ற படியால் இறைவனாகிய கிறிஸ்துவின் மத்தியஸ்த்தத்திற்கு எந்த வகையிலும் இடையூறு ஏற்படமுடியாது (திமொ 2.'.5

ஒருவர் ஒருவருக்காக செபித்தல் ஒருவர் ஒருவருக்காக பரிந்து பேசுதல் வேதாகமத்திற்கு புறம்பான என்றல்ல. இதனை கீழ் வரும் வேதாகம வார்த்தைகளில் காணலாம்: யோவா 11.'.3:20.'.23 லூக்: 7.'.14 மார்க் 5.'.2123:16.'.16-18.தி.வெ 56-8 8.'.34. உரோ 18.'.3030 கொலோ கே 4.'.3 1 தொ 5.'.12 1 திமோ 2.'.1 யாக5.'.16-18 mathew 9.1-8 mark 2.'.1.12 டரமந 5/17.26

**Fr. Francis Jeyaseelan CR, JCL, MCL**

**Missionay of mercy**

கடவுளே, என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்: என் வாயின் சொற்களுக்குச் செவிகொடுத்தருளும் ஏனெனில், செருக்குற்றோர் எனக்கு எதிராய் எழுந்துள்ளனர்: கொடியவர் என உயிரைப் பறிக்கப் பார்க்கின்றனர்: அவர்கள் கடவுளை அறவே நினைப்பதில்லை சங்:54 2-3.

## தமிழ் கத்தோலிக்க வெளியீட்டகத்தின் வேண்டுகோள்

“அன்பு மக்களே “ என்ற பெயருடன் கடந்த 21 வருடங்கள் உங்கள் மத்தியில் வருகை தரும் தமிழ் கத்தோலிக்க வெளியீடு ஒண்டாறியோ அரசாங்க விதி முறைகளுக்கு இணங்க வரையறுக்கப்பட்டு பதிவு செய்து கத்தோலிக்க செய்திகள் . செபங்கள் .திருநாட்கள் .திரு வழிபாட்டு நேர அட்டவணைகள் கவிதைகள் .புனிதர்களின் சுயசரிதைகள் .திருச்சபையின் சுற்றறிக்கைகள் விவிலிய சங்கீதங்கள் நற்செய்தி வாசகங்கள் இறையியல் கருத்துக்கள் .தமிழ்ல் வாசிக்கும் ஆர்வத்தையும் .தமிழ் எழுத்தாளர்களின் ஆக்கங்களையும் வளர்க்க அனைவரையும் இணைக்கும் ஒரு பாலமாகவும் வெளியிடுகின்றோம். இதனால் பல ஆயிரதிதிற்கு மேற்பட்ட குடும்பங்கள் நன்மை அடைகிறார்கள். ஆகவே இறைபக்தியையும் விசுவாசத்தையும் தமிழில் வாசிக்கும் ஆர்வத்தையும் ஊக்குவிக்கும் முகமாக இச்சேவையைச் செய்கின்றோம். மாதந்தம் தோறும் உங்கள் இல்லம் சஞ்சீகையை அனுப்புவோம், வாரந்தோறும் வானொலியில் கேட்கும் கத்தோலிக்க “பரம்பொருள்” நிகழ்வுக்கும் இதற்குத் தேவையான உதவிகளையும் அன்பளிப்புக் களையும் தந்து உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள் கின்றோம்.

பெயர்

..........................................................................

விலாசம்,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,

..............................................................................

தொலைபேசி
இலக்கம்.....................................................

உங்கள் உறவினர்கள் வெளிநர்களில் இருந்தாலும் அவர்களுக்கும் நாம் அனுப்பிவைப்போம். நீங்கள் செய்ய வேண்டியவை மேழே உள்ள படிவத்தை நிரப்பிக் காசோலையுடன் அனுப்பிவையுங்கள்.

வருடசந்தா விபரம்

கனடா 30 டொலர்

வெளிநாடு 50 டொலர்

காசோலை அனுப்பவேண்டிய முகவரி

TAMIL CATHOLIC PULICATION

2623 EGLINTON AVE EAST

SCARBOROUGH ON M1K 2

# கத்தோலிக்க விசுவாசம்

**கடவுள் மனிதனை எதற்காகப் படைத்தார்?** என்ற கேள்விக்குப் பதிலாக சின்னக் குறிப்பிடத்தில் "தம்மை அறிந்து சினேகித்து அதனால் மோட்ச பாக்கியத்தை அடைய வேண்டி கடவுள் மனிதனைப்படைத்தார்" என்ற பதிலை நாம் காண்கிறோம். கடவுளை அறிந்து, அன்பு செய்வது என்பது, கடவுளின் மகனாக இவ்வுலகில் மனிதராகப் பிறந்த இயேசு கிறிஸ்துவை அறிந்து அவர் காட்டிய வழியில் நடப்பதே. இத்தகைய தூய வாழ்வு வாழ் வதற்கு **கத்தோலிக்கத் திருச்சபை** நமக்கு வழிகாட்டுகிறது.

**கத்தோலிக்கத்திருச்சபை** என்பது **உண்மையான ஒரே விசுவாசத்தை** ஏற்று பிதா சுதன் பரிசுத்த ஆவியின் பெயரால் திருமுழுக்குப் பெற்று, இயேசு கிறிஸ்து மற்றும் அப்போஸ் தலர் களின் வழிமரபில் வந்த திருத்தந்தை (போப்) மற்றும்அவரோடு இணைந்து செயல் படும் ஆயர்களின் வழிநடத்துதலில் வாழும் உலக ளாவிய சமூகம்.

## உண்மையான ஒரே விசுவாசம் என்பது:

### பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த எல்லாம் வல்ல பிதாவாகிய சர்வேசுரனை விசுவசிக்கிறேன்.



1. கடவுள் ஒருவரே. அவ ரைத் தவிர வேறொறு கடவுள் இல்லை.
2. கடவுள் எல்லாவற்றிற்கும் மேலானவர். தாமாயிருக்கி றார். அவருக்கு துவக்கமும் முடிவு மில்லை. நிகரற்ற, முடிவில்லா முழுமையைக் கொண்டிருக்கிறார்.
3. கடவுள் சர்வ வல்லமை கொண்டவர். அவருக்கு முடியாததென்று ஒன்றில்லை.
4. கடவுள் வெறுமையிலிருந்து அனைத் தையும் உண்டாக்கினார். எல்லாவற்றிலும் இருப்பவர். எல்லாவற்றையும் அறிபவர்.
5. ஒரே கடவுள், பிதா, சுதன், பரிசுத்த ஆவி என்னும் மூன்று ஆட்களாய் இருக்கிறார்( மூவொருகடவுள்).
6. மூவொரு கடவுளில் இறைத்தந்தை (பிதா) ஆள் தன்மையில் முதன்மை பெறுகிறார்.

### அவருடைய ஏக சுதனாகிய நம்முடைய நாதர் இயேசு கிறிஸ்துவையும் விசுவசிக்கிறேன். இயேசு கிறிஸ்து, கடவுளின் திட்டப்படியும் இறைவாக்குகளின்படியும் நமது பாவங் களுக்காகவும் உலக மாந்தர் அனைவரின் மீட்ப்புக் காகவும் கொடிய பாடுகள்பட்டு சிலு வையில்



1.மூவொரு கடவுளில் இயேசு கிறிஸ்து இரண்டாமவர். இறைத் தந்தையோடு ஒரே பொருளானவர்.
2.இறைத்தந்தையின் ஒரே மகனாகிய இயேசு கிறிஸ்து, மனிதருடைய மீட்புக்காக மனித உடல் எடுத்து மானிடராக பிறந்தார்.
3.அவர் கடவுள் தன்மையில் முழுமையும் அதே வேளையில் மனிதத் தன்மையில் முழுமையும் ஒருங்கே கொண்டவர். தெய் வீகராய் இருந்தாலும் மனிதரைப்போல் உடலும் ஆன்மாவும் கொண்டவராக மண்ணு லகில் மனிதனாக பிறந்தார்.
4. கடவுள் மனிதராக மனுஉரு எடுத்த இந்த நிகழ்ச்சியானது ' மீட்பின் மறைபொருள்' ஆகும்.
5. இயேசு என்பதற்கு 'மீட்பர்' என்றும் கிறிஸ்து என்பதற்கு 'அபிஷுகம் செய்யப்பட் டவர்' என்றும் பொருள்.

### இவர் பரிசுத்த ஆவியினால் கர்ப்பமாய் உற்பவித்து கன்னிமரியிடமிருந்து பிறந்தார்.

1. இயேசு கிறிஸ்து கன்னி மரியாளிடம் மக னாக பிறந்தது தூய ஆவியால். யோசேப்பு வளர்ப்புத் தந்தை ஆவார்.



2.கடவுளின் மகனான இயேசு பிறப்பதற்காக கடவுள் அன்னை கன்னிமரியாளைப் பிறப்பிலிருந்தே புனித மாக படைத்து, வழிநடத்தி, கன்னிமை குன்றாமலேயே மனிதராகப் பிறக்கத் திருவுளம்கொண்டார்.
3.மரியாள் தம் கன்னிமை குன்றாமலேயே இறுதிவரைவாழ்ந்தார்.
4. கடவுளும் மனிதருமான இயேசு கிறிஸ்து பாலஸ்தின நாட்டில் தாவீதின் நகரான பெத்லகேமில் கி.மு. நான்காம் ஆண்டில் கடும் குளிர்காலத்தில் பிறந்தார்.

## போஞ்சுபிலாத்தின் அதிகாரத்தில் பாடுபட்டு, சிலுவையில் அறையுண்டு, மரித்து அடக்கம் செய்யப்பட்டார்.

1. அறையப்பட்டு மரித்தார்.
2.ரோமை அரசால் நியமிக்கப்பட்ட போஞ் சுபிலாத்து என்பவர் பாலஸ்தீன நாட்டு ஆளுனராக இருந்தபோது அவரின் தீர்ப்புக்கு உட்பட்டு சிலுவையில் அறையப்பட்டு மரித்தார்.
3. எருசலேம் நகருக்கு வெளியே கல்வாரி மலை எனும் இடத்தில் புனித வெள்ளிக் கிழமை அன்று பிற்பகல் மூன்று மணி அளவில் உயிர்நீத்தார்.
4. இயேசு கிறிஸ்து கடவுளின் செம்மறி, மனித மீட்ப்புக்காக நம் பாவங்களை தம்மீது ஏற்றுக்கொண்டு, நமது மீட்ப்புக்காக தம்மையே பலியாக்கினார். யூத மதத்தில் பாவப்பரிகாரப் பலி என்னும் பலியானது ஒப்புக்கொடுக்கப்பட்டு வந்தது. இதில் ஒரு மாசற்ற செம்மறி ஆட்டின் மீது மக்கள் செய்த அனைத்துப் பாவங்களையும் சுமத்தி அந்த ஆடானது கடவுளுக்குப் பலியிடப்பட்டது. அப்போது மக்கள் அனைவருடைய பாவங்களையும் கடவுள் மன்னித்ததாக அவர்கள் நம்பினர்.அதே பொருளில் இயேசு கிறிஸ்து கடவுளின் செம்மறி.

## பாதாளத்தில் இறங்கி மூன்றாம் நாள் மரித்தோரிடமிருந்து உயிர்த்தெழுந்தார்.



1. இயேசு கிறிஸ்து உண்மையாகவே மரித்தார். உண்மையாகவே அவரது ஆன்மாவும் உடலும் பிரிந்தது.
2. அவருடைய உடலானது குகைக் கல்லறையில் அடக்கம் செய்யப்பட் டது. அவரது ஆன்மா இறைவனால் மகிமைப்படுத்தப்பட்டது.
3. இயேசு கிறிஸ்து தம் வல்லமையால் மரித்த மூன்றாம் நாள் தம் உடலுக்கு உயிர்கொடுத்து உயிர்ப்பித்தார். தம் உயிர்ப்பின் மூலம் சாவை வென்றார்.
4. இயேசு கிறஸ்துவின் பாடுகளும் உயிர்ப்பும் இரு முக்கிய கூறுகளை உள்ளடக்கியது. தம் பாடுகளாலும் இறப்பாலும் நம் பாவங்களி லிருந்து விடுவிக்கிறார். தம் உயிர்ப்பின் மூலம் புது வாழ்விற்கு நம்மை அழைக்கின்றார்.
5. கிறிஸ்துவின் உயிர்ப்பு நமக்கு மறுவாழ்வின் நம்பிக்கையைக் கொடுக்கின் றது.
6. இது இயேசுவின் தியாகப்பலி மீது மீட்பு, பரிகாரம், உய்வித்தல், நிறைவு என்ற மேன் மைகளை வழங்கும் "இறுதிவரைக்கான அன்பு" ஆகும். புனிதனாய் இருந்தாலும் கூட எந்த மனிதனும் தன் மேல் அனை வரின் பாவங்களையும் ஏற்று, தன்னையே அனை வருக்காகவும் பலியாய் ஒப்புக்கொடுக்க இய லாது. அனைவரையும் கடந்து அனைத்தையும் இயங்குபவரும், மனித குலத்தின் தலையாகத் தன்னை அமைத்துக் கொண்டவருமான இறை மகனாகிய கிறிஸ்துவில் இருந்து அனைவருக் கும் தன் மீட்பில் பங்கு அருள்கின்றார்.

## பரலோகத்திற்கு எழுந்தருளி, எல்லாம் வல்ல பிதாவாகிய சர்வேசுரனுடைய வலது பக்கம் வீற்றிருக்கிறார்.

1. உயிர்த்த நாற்பது நாட்களில் இயேசு கிறிஸ்து ஆன்மாவோடும் உடலோடும் விண்ணகத்திற்கு எழுந்தருளிச் சென்றார்.
2. விண்ணகத்தில் இறைத் தந்தையின் வலப்பக்கத்தில் அமர்ந்திருக்கின்றார்.
3. விண்ணகம் சென்ற இறைமகன் மீண்டும் வருவார்.
4. திருச்சபையின் தலைவராம் கிறிஸ்து நமக்கு முன்பாக இறைத் தந்தையோடு விண்ணகத்தில் அமர்ந்திருப்பதால் கிறிஸ்து வின் உறுப்புகளா கிய நாமும் ஒருநாள் விண்ணகத்தில் இறைத் தந்தையோடும் கிறிஸ்துவோடும் அமர்வோம்.

## அவ்விடத்திலிருந்து சீவியரையும் மரித்தவரையும் நடுத்தீர்க்க வருவார்.

1. ஒவ்வொறு மனிதர் இறக்கும் போதும் கிறிஸ்து தனித் தீர்வையிட்டு தக்க சன் மானத் தையோ அல்லது தண்டனையோ தருவார்.
2. உலக முடிவில் பொதுத் தீர்வையில் அனை வருக்கும் தீர்ப்பு வழங்குவார்.
3 .பொதுத்தீர்வையில் தனித் தீர்வைபெற்ற வர்கள் அத்தீர்வில் உறுதிப்படுத்தப்படுவர்.
4.பொதுத்தீர்வையில் நற்செயல்கள் புரிந்த வர்கள் மோட்ச பாக்கியத்தையும் தீயவர்கள் நரகத்தையும் அடைவார்கள்.

## பரிசுத்த ஆவியை விசுவசிக்கிறேன்.

1. தூய ஆவியானவர் மூவொறு கடவுளில் மூன்றாம் ஆள்.
2.தூய ஆவியானவர் இறைத்தந்தை யோடும் இறை மகன் இயேசுவோடும் ஒன்றித்து செயல் படுபவர். இறைத் தந்தைக் கும் இறைமகன் இயேசுவுக்கும் சமமானவர்.
3. தூய ஆவியானவர் இயேசு கிறிஸ்து திருமுழுக்கு பெற்றபோதும் பெந்தகோஸ் திருவிழாவின் போது அக்கினி நா வடிவில் அப்போஸ்தலர்கள் மீதும் இறங்கி வந்ததை எடுத்துக்காட்டாக கூரலாம்.
4. ஆவியின் ஏழு கொடைகள்: ஞானம், புத்தி, அறிவு, திடம், பக்தி, விமரிசை, தெய் வபயம் (றளைனழஅஇ ரனெநசளவயனெiபெஇ மழெறடநனபநஇ கழ சவவைரனநஇ pநைவலஇ உழரளெநடஇ கநயச ழக வாந டுழசன).
5.ஆவியின் கனிகள் பரிவன்பு, மகிழ்ச்சி, அமைதி, பொறுமை, கனிவு, பரிவு, நன்னயம், பெருந்தன்மை,

மென்மை, நம்பிக்கை, ஒழுங்கு, தன்னடக்கம், கற்பு (உhயசவைலஇ தழலஇ pநயஉநஇ pயவநைnஉநஇ மiனெநௌளஇ அநசஉலஇ பழழனநௌளஇ பநநெசழளவைலஇ பநவெடநநௌளஇ கயiவாகரடநௌளஇ அழனநளவலஇ ளநடக-உழவெசழடஇ உhயளவவைல).

## பரிசுத்த கத்தோலிக்க திருச்சபையை விசுவசிக்கிறேன்.

1. கிறிஸ்துவின் திருச்சபை கத்தோலிக்கத் திருச்சபையில்அடங்கியுள்ளது.
2. திருச்சபை என்பது ஒன்றே. அது புனித மானது, உலகளாவியது, நற்செய்தி அறிவிப்புப் பணியை உள்ளடக்கியது.

திருச்சபை ஒன்றே, எனெனில் பிதா, சுதன், பரிசுத்த ஆவி என்னும் மூன்று ஆட்களான ஒரே கடவுள்தான் அதன் ஆதாரம். இந்த ஒரே ஆதாரத்திலிருந்துதான் ஒரே விசு வாசம் ஒரே நம்பிக்கை, ஒரே திருமுழுக்கு, ஒரே திருப்பலி மற்றும் திருவருட்சாதனங் களை நாம் பெறுகிறோம்.

திருச்சபை என்பது புனிதமானது எனெனில் கிறிஸ்துவே அதன் தலைவர். தூய ஆவி யின் கொடைகளால் அதை நிரப்பிப் புனிதப் படுத்துகிறார்.

திருச்சபை உலகளாவியது. ஏனெனில் திருச் சபையின் தலையாகிய பணி உலகெங் கும் நற்செய்தி அறிவித்தலே ஆகும். அப்போஸ் தலர்களின் வழியில் திருச்சபையானது கிறிஸ் துவின் மீட்புப் பணியை உலகெங்கும் தொடர் ந்து ஆற்றிக்கொண்டு வருகிறது.

திருச்சபை எந்த பாகுபாடுமின்றி அனை வருக்கும் மீட்பைத் தரவல்லது. ஏனெனில் திருச்சபையின் தலைவராகிய கிறிஸ்துவே மீட் பின் முழுமையை திருச்சபைக்கு கொடுத்திருக் கின்றார். முழுமையான விசுவாசம், முழு மையான அருள்வாழ்வு, அப்போஸ்தலர்களின் வழிவந்த அருள் பொழிவு பெற்ற ஆயர்களின் வழிநடத்துதல் ஆகியவைகளை திருச்சபை கொண்டுள்ளது.

3. திருச்சபையின் தலைவராம் கிறிஸ்துவே தமக்குப் பின் புனித பேதுருவை காணும் தலை வராக திருச்சபைக்கு ஏற்படுத்தினார்.
4. திருத்தந்தை (பாப்பரசர்) என்பவர் இன்றய உலகில் காணும் தலைவராக புனித பேதுரு வின் வழிவந்தவர். அவரே ரோமை நகரின் ஆயருமாவார்.
5. புனித பேதுருவின் வழிமரபில், திருத்தந் தையும், திருத்தந்தையோடு இணைந்து ஆயர் களும் திருச்சபையின் நற்செய்தி அறிவிக்கும் பணி, புனிதப்படுத் தும் பணி, மற்றும் ஆளும் பணி ஆகியவை களைத் தொடந்து ஆற்றி வருகின்றனர்.
6. திருத்தந்தை, புனித பேதுருவின் வழி வந்தவர் என்பதால் விசுவாசம் மற்றும் ஒழுக் கம் சார்ந்த அதிகாரப்பூர்வ போத னையில் தவறா வரம் பெற்றவர்.
7. கிறிஸ்துவே திருச்சபையின் தலைவரா கவும் நிறுவனராகவுமிருப்பதால் உலகம் முடியும் வரை அவரே அதனைத் காத்தருள் வார்.

## அர்ச்சியசிஷ்டவர்களுடைய சமூதீதப் பிரயோசனத்தை விசுவசிக்கிறேன்.

1. நாம் இவ்வுலகில் கடவுளின் சித்தத்திற்கு ஏற்ப நல்வாழ்க்கை வாழ்ந்தால் நமது இறப் பிற்குப் பின் நாம் விண்ணகத் தந்தையோடு அமர்வோம். ஆனால் சிறு குற்றங்கள் இருப் பின் விண்ணகத்தந்தையோடு உடன் அமர இயலாமல் உத்தரிக்கிற இடத்திற்குச் செல் வோம். அங்கு நம் குற்றம் குறைகளுக்காக உத்தரித்த பின் நாம் விண்ணகத் தந்தை யோடு அமரும் பேறு பெறுவோம்.

2. இவ்வுலகில் திருமுழுக்குப் பெற்று கடவுளின் அருள் நிலையில் வாழ்கின்ற ஒவ்வொருவரும், உத்தரிக்கிற ஸ்தலத்தில் உத்தரிக்கின்ற ஆன்மாக்களும், விண்ணகத்தில் கடவுளோடு அமர்ந்திருக்கின்ற வான தூதர் களும், புனிதர்களும், அனைத்து மக்களும் ஒரு வர் ஒருவரோடு உறவுகொள் ளும் நிலையில் இருக்கின்றனர். இந்த மூன்று நிலைகளில் உள்ள ஒருவர் ஒருவரோடும் கிறிஸ்துவோடும் இணைந் துள்ளனர்.

நாம் புனிதர்கள் வழியாக ஜெபம் செய்யும் போது புனிதர்கள் மேன்மைப் படுத்தப்படு கிறார்கள். அவர்கள் நமக்காக இறைவ னிடம் பரிந்து பேசுகிறார்கள். இவ்வுலகில் நாம் ஒருவர் ஒருவருக்காக ஜெபம், மற்றும் ஒருத்தல் முயற்சிகள், நற்செயல்கள் செய் வது மிகுந்த பலனைத் தரும். அதேபோல் நம் முடைய ஜெபங்கள், ஒருத்தல் முயற்சிகள், நற் செயல்கள் உத்தரிக்கிற ஸ்தலத்தில் இருக் கின்ற வர்களுக்குப் உதவிசெய்யும்.

## பாவப்பொறுத்தலை விசுவசிக்கிறேன்.

1. பாவம் என்பது நமது சிந்தனையாலும் சொல்லாலும் செயலாலும் கடவுளின் அன் பைப் புறக்கணித்து அவர் காட்டிய வழியில் நடவாமல், கடவுளை நோகச் செய்வதாகும். சுருக்கமாக கடவுளின் அன்பைப் புறக்கணிப் பது பாவம்.கடவுள் அன்பே வடிவானவர். அந்த அன்பின் வெளிப்பாடு இயேசு கிறிஸ்து. கிறிஸ்தவர்களான நாமும் அதே அன்பில் வாழ அழைக்கப் படுகிறோம். இத்தகைய அன்பில் வாழாமல் சுயநலத்திலும், உலக இன்பத்திலும் மூழ்கி, கடவுள் நமக்கு கொடுத்த அன்புக் கட்டளைக்கு எதிராக செயல்படும்போது கடவுளின் அன்பைப் புறக்கணிக்கிறோம். நம்மை அன்பு செய்யும் கடவுளுக்கு எதிரா கவும், அன்புசெய்து வாழவேண்டிய சகோதர சகோதரிகளுக்கு எதிராகவும் பாவம் செய்கிறோம்.

2 அற்ப காரியத்திலோ அல்லது முழு ஈடுபாடில்லாமலோ, அல்லது அறியாமை யினாலோ நாம் செய்யும் தவறுகள், குற்றங் கள் அற்ப பாவம். எடுத்துக்காட்டு -நமது சௌகரியத்திற்காக சிறு பொய் சொல்லுதல் (அடுத்தவர்களுக்கு அதிக பாதிப்பு ஏற்படுத் தாது). கடவுளின் உறவில் பாதிப்பு ஏற்படுத் தினாலும் எழிதாக மீண்டும் அன்புறவை ஏற்படுத்திக் கொள்ள இயலும்.

கனமான காரியத்தில், மனம் பொருந்தி, முழு ஈடுபாட்டுடன், பாவம் என அறிந்தும் அதைச் செய்வது சாவான பாவம். எடுத்துக் காட்டு: மனமறிந்து மோக பாவம் செய்வது, கொலை செய்வது, போன்றவையாகும். (அடுத்தவர்களுக்குப் பாதிப்பு அதிகமாக இருக்க கூடிய செயல்கள் அனைத்தும்) இவை நமது ஆன்மாவை முற்றிலுமாக சாவுக்கு இட்டுச் செல்லும் காரியங்கள். கடவுளோடு உள்ள அன்புறவு முற்றிலுமாக துண்டிக்கப்பட்ட நிலையை ஏற்படுத்துகிறது.

3. ஜென்ம பாவம் அல்லது ஆதிபெற்றோர் பாவம் என்பது ஆதாம் ஏவாள் செய்த முதல் பாவம். இதனால் நாம் புனிதத் தன்மை இழந்து பாவ இயல்புக் குள்ளா கிறோம். நாம் திருமுழுக்குப் பெறும்போது நாம் இந்தப் பாவம் நீக்கப்படுகிறது. நாம் கடவுளின் பிள்ளைகளாகிறோம்.

4. ஒப்புரவு என்னும் திருவருட்சாதனத்தைப் தகுதியுடன் பெறும் எவரும் அனைத்துப் பாவங்களுக்கும் மன்னிப்புப் பெற்று கடவு ளோடும் மனிதரோடும் முழு ஒப்புறவு ஆகின்றனர்.

## சரீர உத்தானத்தை விசுவசிக்கிறேன்.

உலகம் முடியும் நாளில் நாம் அனைவரும் நமது உடலோடு உயிர்தெழுந்து அழியா உடலைப் பெறுவோம். அந்நாளில் நமது ஆன்மாவும் உடலும் மீண்டும் இணையும்.

1.உலகம் முடியும் நாளில் நாம் அனை வரும் நமது உடலோடு உயிர்தெழுந்து அழியா உடலைப் பெறுவோம். அந்நாளில் நமது ஆன்மாவும் உடலும் மீண்டும் இணையும். நீதிமான்கள் (கடவுளின் சித்தத்திற்கேற்ப வாழ்ந்தவர்கள்) இவ்வுலக வாழ்விற்குப்பின் நித்திய பேரின்பத்தை (மோட்ஷத்தை) சுதந்தரித்துக் கொள்வார்கள். தீயவர்கள் தண்டனைக்கும் அழியா நெருப்பிற்கும் (நரகத்திற்கும்) செல்வார்கள்.
2. உலகம் முடியும் நாளில் பொதுத் தீர்வையின் போது உத்தரிக்கிற இடத்தில் இருக்கின்றவர்கள் அனைவரும் ஆன்மாவே டும் உடலோடும் விண்ணகத்தில் இறைத் தந்தையோடு அமர்வர். அதன் பின் உத்தரிக்கின்ற இடம் என்ற ஒரு நிலை இல்லாமல் போகும்.

# மனைவி கணவனிடம் எதிர்பார்க்கும் விசயங்கள்

01. அன்பாக , பிரியமாக இருக்க வேண்டும்.
02. மனது புண்படும்படி பேசக் கூடாது.
03. கோபப்படக்கூடாது.
04. சாப்பாட்டில் குறை சொல்லக் கூடாது
05. பலர் முன் திட்டக்கூடாது.
06. எந்த இடத்திலும் மனைவியை விட்டுக் கொடுக்க கூடாது.
07. முக்கிய விழாக்களுக்கு சேர்ந்து போக வேண்டும்.
08. மனைவியிடம் கலந்து ஆலோசிக்க வேண்டும்.
09. சொல்வதைப் பொறுமையாகக் கேட்க வேண்டும்
10. மனைவியின் கருத்தை ஆதரிக்க வேண்டும், மதிக்க வேண்டும்.
11. வித்தியாசமாக ஏதாவது செய்தால் ரசிக்க வேண்டும் பாராட்ட வேண்டும்.
12. பணம் மட்டும் குறிக்கோள் அல்ல. குழந்தை, குடும்பம் இவற்றிற்கும் உரிய முக்கியத்துவம் தந்து நடந்து கொள்ள வேண்டும்.
13. வாரம் ஒரு முறையாவது. மனம் விட்டுப் பேச வேண்டும்.
14. மாதம் ஒரு முறையாவது வெளியில் அழைத்துச் செல்ல வேண்டும்.
15. ஆண்டுக்கு ஒரு முறையாவது சுற்றுலா செல்ல வேண்டும்.
16. பிள்ளைகளின் படிப்பைப் பற்றி அக்கறையுடன் கேட்க வேண்டும்.
17. ஒளிவு மறைவு கூடாது.
18. மனைவியை நம்ப வேண்டும்.
19. முக்கியமானவற்றை மனைவியிடம் கூற வேண்டும்.
20. மனைவியிடம் அடுத்த பெண்ணைப் பாராட்டக் கூடாது.
21. அடுத்தவர் மனைவி அழகாக இருக்கிறாள் என்று எண்ணாமல் தனக்குக் கிடைத்ததை வைத்து சந்தோசப்பட வேண்டும்.
22. தனக்கு இருக்கும் கஷ்டம் தன் மனைவிக்கும் இருக்கும் என்று எண்ண வேண்டும்.
23. உடல் நலமில்லாத போது உடனிருந்து கவனிக்க வேண்டும்.
24. சின்ன, சின்னத் தேவைகளை நிறைவு செய்ய வேண்டும்.
25. சிறு சிறு உதவிகள் செய்ய வேண்டும்.
26. குழந்தைகள் அசிங்கம் செய்து விட்டால் 'இது உன் குழந்தை ' என்று ஒதுங்கக் கூடாது.
27. அம்மாவிடம் காட்டும் பாசத்தை, மனைவியிடமும் காட்ட வேண்டும். ஏனென்றால் மனம் சலிக்காமல் அம்மாவை விட, அக்கா, தங்கையை விட அதிகமாக

கவனிக்க கூடியவள் மனைவி.
28. நேரத்திற்குச் சாப்பிட வேண்டும்.
29. சாப்பாடு வேண்டுமென்றால் முன் கூட்டியே சொல்ல வேண்டும்.
30. எங்கு சென்றாலும் மனைவியிடம் சொல்லி விட்டுச் சொல்ல வேண்டும்.
31. சொன்ன நேரத்திற்கு வர வேண்டும்.
32. எப்போதும் வீட்டு நினைப்பு வேண்டும்.
33. மனைவியின் பிறந்த நாள் தெரிய வேண்டும்.
34. மனைவிக்குப் பிடித்தவற்றைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும்.
35. பொய், சூது, மது, மாது போன்ற தீய பழக்கங்கள் கூடாது.
36. மனைவி வீட்டாரைக் குறை சொல்லக் கூடாது.
37. கைச் செலவுக்கு பணம் தர வேண்டும்.

## உடனே அழைத்திடு

உண்மையாய் கூப்பிடும் யாவருக்கும்

அண்மையில் வந்திடுவேன் என்றுரைத்த தேவன்

வாயிற் கதவை திறந்து நீ வரவேற்றால்

வந்துன்னுடனே பந்தியமர்வேன் என்றாரே

என்னை விசாரித்து என் தேவைகளை அறிந்த அவர்

தன்னை அழையாது நாம் விடினும் தக்கவேளை வந்திடுவார்

உந்தன் அழைப்பை எதிர் பார்க்காவிடினும்

வருந்தி நீ அழைப்பாய் என்று விரும்பியிருக்கிறார்

காணாவூர்க் கலியாணத்திற்குக் களிப்புடன் சென்ற அவர்

அன்னையின் விருப்பில் அதிசய புதுரசம் ஆக்கினார்

அழைத்தவரின் அவமானம் நீக்கினார் அவையில்

சின்ன வயதிற் செய்த முதற்புதுமை இதுவன்றோ.

நேயுற்று வருந்திச்சாகும் நிலையிருந்த தன்பணியாளரை

நூற்றுவர் தலைவன் மீட்டெடுக்க இயேசுவை அழைத்தான்

வீட்டுக்கு வருமுன்னே வார்த்தை ஒன்றே போதுமென்றான்

முற்றிலும் குணமடைய அதுவே காணுமென்றான்.

ஒருவர் ஏழையாய் இருக்கிறார் என்று அவரை வஞ்சிக்காதே: ஒருவர் ஆதவரவின்றி இருக்கிறார் என்று அவரை நீதிமன்றத்தில் சிறுமைப்படுத்தாதே. ஏனெனில், ஆண்டவர் அவர்களுக்குகாக வாதாடுவார்: அவர்களது உயிரை வாங்கப் பார்க்கிறகளின் உயிரை அவர் பறித்துக்கொள்வார். நீதிமொழிகள் 22.22.

## இல்லற வாழ்க்கை இனித்திட- குடும்ப நல கோர்ட்டின் 10 அறிவுரைகள்.

1. ஒரேசமயத்தில் இருவரும் கோபப்படாதீர்கள்.

2. வாக்குவாதம் ஏற்படுகின்ற பிரச்சினைகளில் ஒருவர் மற்றவரைஜெயிக்கவிட்டு மகிழ்ச்சி அடையுங்கள். விட்டுக் கொடுப்பவர்கள் கெட்டுப் போவதில்லை எப்பொழுதுமே!

3. விமர்சனத்தையே வாஞ்சையுடனும், அன்புடனும் செய்து பாருங்கள்.

4. கடந்தகால தவறுகளைச் சுட்டிக் காட்டாதீர்கள்.

5. உலகத்திற்காக போலியாக வாழ்வதைக் காட்டிலும், உங்களுக்காகவே வாழ்ந்து பாருங்களேன்.

6. விவாதம் தவிர்க்க முடியாதது என்றால், கூடியவரைக்கும் அதை ஒத்திப் போடுங்கள்.

7. ஒரு நாளைக்கு ஒரு முறையாவது ஒரு அன்பான வார்த்தையோ அல்லது வாழ்த்தோ உங்கள் துணையிடம் உபயோகப்படுத்திப் பாருங்கள்.

8. செய்த தவறை உணரும்போது அதை ஒத்துக் கொள்ளவும் அல்லது அதற்காக மன்னிப்புக் கேட்கவும் தயங்காதீர்கள்.

9. இல்லற வாழ்க்கை இனித்திட, மூன்று தாரக மந்திரங்கள்.

- சூழ்நிலைக்கேற்ப நடந்து கொள்ளுதல்- அனுசரித்துப் போகுதல்- மற்றவர்களை மதித்து நடத்தல்.

10வது அறிவுரை.

விவாகரத்து கோரி வரும் தம்பதிகள் இந்த பத்து அறிவுரைகளையும் ஒரு பத்து நிமிடம் ஆற அமர நின்று ஒன்றுக்கு இரண்டு முறை படித்தாலே போதும், 'டைவர்ஸ்' கேட்டு வரும் ஜோடிகள் 'டைவர்ட்' ஆகிச் செல்லும் வாய்ப்பு உருவாகும்.

நல்லுரை கேட்பதில் சிந்தனையைச் செலுத்து: அறிவூட்டும் மொழிகளுக்குச் செவிகொடு நீதி 23:12

பெற்ற தந்தைக்குச் செவி கொடு உன் தாய் முதுமை அடையும்போது அவளை இழிவாக எண்ணாதே. நீதி: 23.22

## தியாக்கோன் றோய் இம்மானுவேல் அவர்கட்குப் பாராட்டுப் பாமாலை.

ஆலய மக்கள் கூடி நிக்க இறை அருள் பொழிந்திருக்க
செங்கம்பளம் விரிக்கவில்லை தோறணமும் கட்டவில்லை
அகமும் முகமும் மலர்ந்து உள்ளம் பூரிக்க
வருக வருக என்று வாழ்த்தி வரவேற்கின்றோம்

நடப்பாண்டு இரண்டாயிரத்துப் பதினாறு
வைகாசித் திங்கள் இருபத்தெட்டாம் திகதி
பாக்கியம் பெற்ற நம் கனடா மண்
தியாக்கோண் றோய் இம்மானுவேலை கண்டு கொண்டதே

கர்தினால் ஆண்டகை முன்னடக்க
ஆயர்கள் இருவர் வழி தொடர
எழுபத்திரண்டு குருக்கள் அணி தொடர
பணிவோடும் பண்போடும் வலம் வந்த தியாக்கோனே

பலிப்பீடம் பரலோகமாய் விளங்கிட
கர்தினால்! ஆயர்கள்! கூட நிக்க
பன்னிரு குருக்கள் சூழ்து நிக்க
திருப்பலியில் திருப்பொழிவு பெற்றீரே

பரலோகம் நாம் கண்டதில்லை இறை குரலை நாம் கேட்டதில்லை கண்ணைக் கவரும் காட்சியாக
பலிப்பீடம் விளங்கிடவே அபிசேக வார்த்தைகள் உள்ளத்தை ஊடறுக்க
கர்தினால் ஆண்டகையால் திருப்பொழிவு பெற்றீரே

பங்கில் பணி செய்திட குருக்கள் நமக்குப் போதவில்லை
குறைகள் தவிர்த்து பணிகள் பல செய்திட
உதவிக்கரம் கொடுத்து பணிகள் நீர் செய்திடவே
பங்கு மக்கள் நாம் ஆர்வமுடன் வேண்டுகிறோம்

மக்கள் தம் தேவைகளை இனம்கண்டு நிறைவுசெய்ய
கர்த்தர் தம் கரம் என்றும் உம்மோடு இணைந்திருந்து
நம்மவரை வழிநடத்த உப்பாக!ஒளியாக!
சாரமேற்றி இருளகற்றி வல்லமையாய் வலம்வருவீர்

செடியில் இணைந்த கொடியாக கனிகள் பல கொடுக்கவே
பண்பட்ட நிலத்தின் விதையாக பலன்கள் அதிகம் கொடுக்கவே
தாகமான ஆட்டு மந்தை நீரோடை கண்டிடவே
கருணை கொண்ட நம் தேவன் உம்மை வழி நடத்துவாரே

இறை பணி உமக்குப் புதிது அல்ல
சிறியதில் உண்மை கண்ட நம் தேவன்
இன்று நேற்று அதை நீர் தொடங்வில்லை
பெரியதில் பொறுப்பாக வைத்தார் நம் தேவன்
சிறு வயது தொட்டே படிப்படியாக
தயக்கமின்றி உம் கரம் தந்த பணியதனை
பண் படுத்தி வந்த பணி அன்றோ
பொறுப்புடனே செய்திடவே வாழ்த்துகிறோம்

காவலூரான்

# "அன்பு மக்களே" கனேடிய தமிழ்ப் பத்திரிகைப் பாதை 21ம் ஆண்டு நிறைவில் நிகழ்ந்த முத்துக்கள்

1996 ஆண்டு சில பக்கத்தோடு ஆரம்பித்த பத்திரிகை அதன் வளர்ச்சியில் கிறிஸ்தவ அறிவு .உணர்வு முக்கியமாகக் கிறிஸ்தவ செயற்பாடு களைத் தாங்கி வெளிவருகிறது."சமயம் என்புது "வாழ்வின் வழியி லேயே முத்தாக அமைகிறது ".அன்பு மக்களே" கிறிஸ்தவ வாழ்க்கையை நாடி நிற்கின்றது. எதற்கும்; காரணம் கேட்கும் உலகத்தில் வாழ்கின்றோம். காரணங்களை விவிலிய வார்த்தைக ளில் காணலாம். விவிலிய வார்த்தைகள் நாம் விளங்கிய வழியிலும் விளங்காத விடத்து கிறிஸ்தவ அறிஞர்களிடமும் விளக்கங்கள் கேட்டும் எழுதியுள் ளோம் .எமது ஐயங்களுக்கு விளக்கமளித்துதவிய வணக்கத்துக் குரிய கலாநிதி .கிறிஸ்ரி ஜோக்கிம் பிள்ளை .வணக் கத்துக்குரிய ஞானப்பிரகாசம் .வணக் கத்திற்குரிய அந்தோனிப்பிள்ளை தோமாஸ்..தியாகக்கோன் ஜோசப் போன்றோரின் அளப்பரிய உதவி களை எம்மால் மறக்க முடியாது.

கடந்த காலக் கிறிஸ்தவ உண்மைகள் சிலவற்றை இங்கு காட்டி அவற்றின் சிறப்பை முன்பு எமது பத்திரிகையில் விளக்கமாகக் கூறினும் .இன்று அவற்றை நீவிர் ஊகித்தறிந்து அவற்றின் மாபெரும் விழுமியப் பேறுகள் அறியவிட்டுவிடுகிறோம்.

இயேசுவின் சிலுவை மரணமும் .உயிர்ப்பும் உலக கிறிஸ்தவ தர்மத்தின் விசுவாச முத்துக்கள்.சிலுவை மரணத்தின் போது இயேசு கூறிய வார்த்தைகள் அறிந்தாலே கிறிஸ்தவ நெறியின் போக்கும் தத்துவ மும் தானே விளங்கும்.

1."தந்தையே அவர்களை மன்னியும் .ஏனெனில் தாங்கள் செய்கிறது இன்னதென்று அவர்களுக்கு தெரியவில்லை" (இது மன்னிப்பையே கிறிஸ்தவ நெறியின் தாரக மந்திரம் என்பதைக் காட்டுகின்றது.)

2.வலது பக்கத்துக் கள்வனைப் பார்த்து "இன்றே நீ என்னோடு வான் வீட்டில் இருப்பாய்"(லூாக் ˙ 34‐43)

3.பரிசுத்த கன்னிகையான தமது மாதாவைப் பார்த்து அர்ச் (யோவான்) யுவாணியாரைக் காண்பித்து "அம்மா இதோ உன் மகன் "(அரு:19 -26)"இதோ உன் தாய்"

4."என் கடவுளே என் கடவுளே ஏன் என்னைக் கைவிட்டீர்"

5."தாகமாயிருக்கிறது" (அரு: 19-46)

6.."எல்லாம் நிறைவேறிற்று"

7."தந்தையே உமது கையில் எனது ஆவியை ஒப்படைக்கின்றேன்."(லூாக் :26-46)

மேலே எமது மீட்பராகிய இயேசுக் கிறிஸ்து நாதரால் கூறப்பட்ட ஏழு வாக்கியங்களையும் சிந்தித் தால் மன்னிப்பு. மகிழ்வு பாவிகளின் மீட்பே கிறிஸ்த்தவ தர்மம்..இறை அருளில் சரணடைவதே இயேசுவின் வழியும் ஒளியும் உண்மையின் நெறியுமாகிறது .இறைவனிடத்தே சரணடைவதையும் மக்கள் பணி யையே வேதமேல்லாம் நாதமாகக் கொள்கின்றன .இவற்றையே இயேசுவின் சிறந்த இரண்டு கற்பனை களும் கூறுகின்றன. இறைவனுக்கு "ஓசான்னா " என்ற உயர் வணக்கம் அளித்து மக்கள் பணி செய்வதே மகிமையாம் இயேசு வழி.

"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்துமறன் ஆகுல நீர பிற" என்ற நன்மனமே அறத்தின் உற்பத்தி என மலைப் பொழிவு கூறுவதும் சிந்திக்கற்பாலது. இயேசுவின் சிலுவை ஏழு வாக்கியங்களும் சிந்திக் கச் சிந்திக்க எத்தனையோ சிக்கல்களைத் தீர்த்து அமைதி என்னும் அந்தப் புறாவான தூய ஆவியின் எழுச்சி பெறவாய்ப்பளிக்கும்.

அர்ச்சஸ்ரவர்களுடைய ஐக்கிய பிரயோசனத்தை விசுவாசிக்கின்றோம்.என்பது எமது விசுவாச மந்திரத் தில் உள்ளது.நாம் விசுவாசிக்க வேண்டிய சத்தியங் களில் ஒன்று அதன் கருத்து எத்தனை பேருக்கு விளங்கும் என்பது தெரியாது.எமது கத்தோலிக்க திருச்சபை நாம் ஒவ்வொருவருக்காகவும் மன்றாட லாம். ஏன்பதை ஏற்கிறது. உத்தரிப்பு ஸ்தல ஆத்து மாக்களுக்காக நாம் மன்றாடலாம். அவ்வாத்துமாக் கள் எமக்காக மன்றாடலாம்.ஆனால் ஆத்துமாக்கள் தமக்காக மன்றாட முடியாது .புனிதர்கள் எங்களுக் காக மன்றாடலாம்.இவை போன்றவற்குரிய விபரமான விளக்கமளித்துள்ளோம்..இதனால் விழிப்புணர்வும் வேத விளக்கமும் கடந்த காலச் சஞ்சிகைகளில் உண்டு.

கனேடிய வேதசாட்சிகளின் வரலாறும் "மிட்லாண்ட்" திருயாத்திரை வரலாறும் வேதசாட்சிகளுக்கான மன் றாட்டுக்களும் பிரசுரித்துள்ளோம். ஒவ்வொரு மாதம் தோறும் தினங்களுக்குரிய விவிலிய மன்றாட்டுக்கள் வெளியிட்டது மட்டுமன்றி வானொலி பரம் பொருள் கத்தோலிக்க நிகழ்ச்சி வாரம் தோறும் விவிலிய வார்த்தை வழிபாடுகளுக்கு விளக்கம் அளிப்பதும். அத்துடன் திருச்சபையில் நடைபெறுகின்ற செயற் பாடுகள் பணிகள் அவற்றின் நோக்கங்கள் பற்றிய

கேள்வி பதில்கள் மூலமும் விவிலிய வார்த்தை களுக்கு விளக்கமளித்துள்ளோம்.

வத்திக்கான் செய்திகள் கிறிஸ்தவ வாழ்க்கை முறை என்பனவும் விவிலிய நிகழ்ச்சிக் கவிதை களும் குறுக்கெழுத்துப் போட்டிகளும் நடத்தி கத்தோலிக்க விழிப்புணர்வு பறிறிய சிந்தனையைத் தூண்டியுள் ளோம்.

இரண்டாவது அருளப்பர் சின்னப்பர் நூலில் மொழி யாக்கம் ..புனித பற்றிமா மாதா வரலாறு பிரசரித்து வெளியிட்டுள்ளோம். செபமாலை எவ்வாறு செபிக்க வேண்டிடும்? காரணிக்கங்கள் கூறும் உண்மைகள் கிறிஸ்தவ வழிபாடும் வாழ்வும் என்பன பற்றி இலகு வான தழிழில் வெளியிட்டுள்ளோம்

மாதாவுக்கு எத்தகைய வணக்கம் உரியது என்பதும நாம் ஏன் மாதாவை மதித்து வணங்க வேண்டும் என்பதையும் காரணங்களோடு ஏழுதியுள்ளோம். கானாவூர் கலியாண வீட்டில் மாதாவின் வழிகாட் டலால் "தண்ணீர் இரசமாக மாற்றப்பட்டதையும் இயேசு தனது காலம் வருமுன்பே மாதாவின் வேண டுதலால் செய்த முதல் அற்புதத்தையும். இறைவனால் இறைமகனின் தாயாகத் தெரிந்தெடுக் கப்பட்டதையும் போன்ற பல மகிமைப்படுத்தி அதன் மூலமும் வேண்டலாம் என்பதை நிலைப்படுத்திக் கூறியுள்ளோம்.

"அன்புமக்களே" சஞ்சிகை வேதத்தை விளக்கி உணர்ந்து சமய வாழ்வு வாழ உதவும் வழிபாட்டு நூல்..சமயம் என்பது அறிதல் மட்டுமன்றி .உணர்தல் மட்டுமன்றி கத்தோலிக்க வாழ்வில் செயற்பட்டு வாழ வைக்கும் பாதுகாவற் சஞ்சிகை. .அன்புமக்களே சஞ் சிகைப் பாத்திரிகை மேலும் வளர விவிலிய நற்செய்தி பரப்ப நாங்களும் நீங்களும் பங்காளர் களாக மாற வேண்டும்.இறை ஆசீர் எல்லோரும் பெற இயேசுவின் நாமத்தால் வேண்டுகிறோம்.

# 1916-2016 ஐப்பசி சதக விழா (நூற்றாண்டு)

## யாழ்ப்பாணம் - கஸ்த்தூரியர் வீதியிலிருக்கும் கொலைவிலக்கி ஆரோக்கிய மாதா கோவில் வரலாறு.

சைவக்கோயில்கள் நிறைந்த. வண்ணார் பண்ணை இருக்கும் பகுதியிலே உள்ள ஆரோக்கியமாதா கோயில். அன்றும் இன்றும் அருள்புரிந்து, அப்பகுதி மக்களைக் காக்கும் அன்னையின் கோயிலாக இருக் கிறது. அதன் வரலாறு மகிமையும் என்றும் யாழ் பாணக்கத்தோலிக்கர் வாழ்வில் வளமான நினைவூட்டும்

1916ம் ஆண்டளவிலே நல்லூர்ச் சுவாமி ஞானப்பிர காசரால் இக்கோயில் கட்டப்பட்டது அங்கு ஆரோக் கியமாதா கோயில் எப்படி முதன் முதல் தோன்றி யது, எவ்வாறு எல்லா மதத்தினரும் வேண்டும் தலமாகியது என்பது நீனைவில் நிறுத்த வேண்டிய ஒரு செய்தி.

அன்று அங்கு வாழ்ந்தவர்கள் பாமரர்கள்: அவர்கள் நான்குவித தொழில்களையும் செய்து வந்தவர்கள் குதிரைவண்டில்கள் வைத்து, வாடகைக்கார் போல பயன் படுத்தி உழைப்பார்கள். இன்றைய பெரிய கடைப்பகுதி பல பங்களாக்களாய் அமைந்திருந்த காலம்: அங்கு விற்பனைப் பொருட்கள் குவித்து அழகாய் அடுக்கி வைத்திருக்கும், அங்கு தேங்காய் விற்றல், மரக்கறி விற்றல் போன்ற தொழில்களையும் செய்தனர். தனவந்தர் சிலரின் கையாட்டகளாய் சிலர் இருந்து அவர்கள் தமது காரியங்களை நிறைவேற்றும் கருவிகளாகிப் பின் "சண்டியர்கள்" என்ற பெயரையும் பெற்றனர். அது அன்றாடம் உழைப்பவர்கள் குடித்துக் களிக்கும் வாழ்க்கையை கல்வியை நாடாத வாழ்க்கையை அவர்களுக்கும் அளித்தது. இது சமூக நிலையில் பலாத்காரம் பாவித்து சமூக அந்தஸ்த்தில் வாழ்க்கையை சமத்துவம் பேண வழி வகுத்தது. அத்தகைய மக்கள் மத்தியில் சுவாமி ஞானப்பிரகாசர் கோயில் கட்டியது என்பதற்கு ஓர் உண்மைக்கதை காரணம் ஆயிற்று.

அன்று 1915 ஆம் ஆண்டு வல்லிபுரம் என்பவர் சூது விளையாடுவதில் சமர்த்தர் அவர் சூதுவிளையாடி வென்று வரும் வழியில், நெடுந்தீவைச் சேர்ந்த அன்றைய கந்தையா என்ற பொலிஸ்க்காரர் காசு பெறுவது வழக்கம் கந்தையா வல்லிபுரம். மாரியாச் சிவல்லி எனச் செல்லமாக அழைக்கபடுபவர் உயர்ந்த தோற்றமும் நீண்டகைளும் உடையவர். அவர்தான் வாழ்ந்த "திமிலகண்டப் புளியடி" என்ற இடத்தில் அவரும் அவரது தந்தை கந்தர், ஆச்சி (அன்றைய அம்மா) இராமாசி இளைய சகோதரிகள் திருமதி பேச்சிமுத்து சின்னன் திருமதி.பார்வதி நல்லார், திருமதி செல்வாச்சி வேலர், திருமதி. செல்லையா, திருமதி கண்ணுமணி பொன்னர். சின்னப்பு என்போர் வாழ்ந்து வந்தனர். அன்று அப்போது கூட்டுக்குடும்ப வாழ்வு இருந்து வந்தது.

மாரியாச்சி வல்லி சூதாடித் தோற்று வந்து கொண் டிருக்கும்போது வழமையாகக் பொலிஸ் கந்தையா காசி கேட்கிறார். நாவாந்துறை றோட்டும். கஸ்த்தூரியார் வீதியும் சந்திக்கும் இடம். இன்று காசில்லை என வல்லிபுரம் கூறப் பொலிஸ் காரர் "மடியை" வேட்டியில் முன்பு காசு கட்டியிருக் கும்

பகுதியைப் பிடித்து இழுக் கிறார். அவ்வேளை அவ்வழியிலே வந்த பார்வதி “அண்ணனின் மடியை விடுங்காணும்” கையை விடுவிக்க முயல விடுங்காணும்” என்று கையை விடுவிக்க முயல, பொலிஸ்காரர் அவவை உதைக் கிறார். அவருடைய தங்கை பார்வதி நிலத்தில் உதைபட்டு விழுந்ததை கண்ட அண்ணனுக்கு அளவு மீறிய கோபம் ஏற்படுகிறது. வேட்டியின் ஒரு பக்கத்தில் செருகியிருந்த வில்லுக் கத்தியை எடுத்து விரித்து பொலிசாரைக் குத்தகிறார். பொலிசார் வயிற் றிலே ஏற்பட்ட காயத்தினால், அங்கே வீழ்ந்து இறக் கிறார். அவர் பகலிலே புளிய மரத்தில் ஒளித்தும், இரவில் வீடு வந்து சென்றாலும் ஈற்றில் பிடிபட்டு, தூக்குத்தண்டனை பெறுகிறார்.

அத்தருணத்தில் நல்லூர் ஞானப்பிரகாசம் சுவாமி மனு எழுதித்தூக்கை விலத்தினால், கிறீஸ்த் தவர்களாக மாறுவதற்குச் சம்மதித்த குடும்பத்தினர் வேண்டுதலுக் கிணங்க, மேல் நீதி மன்றத்துக்கு மனு அனுப்புகிறார், தூக்குத்தண்டனையை விலத்தி, 20 வருடச் சிறையாக மாற்றப்படுகிறது.

சைவச் சூழலிலே இருந்த அக்குடும்பத்தார் அனைவரும், அவர்களின் நெருங்கிய உறவினர் சிலரும் ஞானஸ்நானம் பெறுகின்றனர். அங்கு அத்தருணத்தில் ஞானப்பிரகாசம் சுவாமியால் ஆரோக்கிய மாதா கோயில்,ஓலையால் வேயப்பட்டுக் காட்சியளிக்கிறது. இதுவே முதலில் இலங்கையில் கட்டப்பட்ட புனித ஆரோக்கிய மாதா கோயில் எனப்படுகிறது. சிலர் இக்கோயிலைக் கொலை விலக்கி மாதா கோயில் எனவும் அழைப்பர். இக்கோயில் (நோவினைகள்) திருவிழாக்கள் புரட்டாசி மாதத்தில் நடைபெறும்.

சண்டித்தனம் நிறைந்த இடத்தில் ஆரோக்கிமாதா கோயில். சைவர்கள் மத்தியில் இக்கோயில் அக்காலத்தில் கட்டப்பட்டாலும், அது நன்கு பராமரிக்கப்பட்டது யாழ்நகரிலே அம்மை. நோய்வரின் பல்வேறு வீதிகள் தடுக்கப்பட்டு மருந்து கொடுப்பார்கள். ஆரோக கியமாதா கோயில் கட்டியபின், அப்பகுதியிலும், அது சூழ்ந்த பகுதியிலும் அம்மை நோய் தொற்றுவதில்லை யாம். சைவர்களில் பெரும்பாலோர் அக்கோயிலுக்கு செவ்வாய், வியாழன், வெள்ளி, சனிக்கிழமைகளில் சென்று வழிபடுவர். அவர்களின் நேர்த்திகள் நிறை வேறியதால், கோயிலுக்கான மணிக்கோபுரம் மணி, மின்சாரவசதி போன்றன சைவ மக்களாலேயே உவந்து அளிக்கப்பட்டன.

ஆரோக்கிய மாதா கோவில், பல வருடங்கள் திருநெல்வெலி சவேரியார் கோயில பங்கோடு சுவாமி ஞானப்பிரகாசரின் கீழ் இணைக்கப்பட்டிருந்தது. அண்மையில் சில வருடங்களாய் நாவாந்துறைப் பங்கோடு இணைக்கப்பட்டிருக்கிறது.

ஆரோக்கிய மாதா கோயில் திருச்சுரூவ பவனி புரட்டாதித்திங்கள் நடை பெறும்.கோயிற் கடைசித் திருநாள் அன்று வீதியெங்கும் தோரணங்களால் சோடிக்கப்பட்டு செபத்தோடு பாடும்பாடகர்குழாத்தோடு கோயிலிருந்து கஸ்த்தூரியார் வீதி வழியாக ஆரோக் கிய மாதா திருச்சுரூவம் பவனி வரும் .பக்தர்கள் மாதாவை திருக்கூட்டில் வைத்து காவி வருவர்.வீடு தோறும் வாசல்களில் மெழுகு வர்த்தி ஏற்றப்பட்டு பூமலர்கள் வைக்கப்படும்.எல்லா மதத்தினரும் பூக்கள் தூவிக் கடலை. சோளம் பொரி எறிந்து மாதாவை வரவேற்பர்.சிறுவர் கடலை பொறுக்கும் காட்சி கண் ணுக்கு களிவிருந்து வீடுதோறும் கொடுக்கும் காணிக் கைப்பொருட்கள் மெழுகுவாத்திகள் கோயிலுக்காய்ச் சேகரிக்கப்படும்

ஆரோக்கிய மாதா கோயில் கட்டிய பின்பு அமைதி அருள் அஞ்சணந்தாழ்வில் பெருகிற்று. அஞ்சணந்தாழ்வுக்கு அண்மையில் நாவலா் பாடசாலை .யாழ் இந்துக்கல்லூாி போன்றன இருந்தாலும் அங்கு கற்கும் வாய்ப்பு அவ்வூா் மக்களுக்குக் கிடைக் கவில்லை .ஞானப்பிரகாசம் சுவாமி வின்ஸ்லோப் போதகா் போன்றோா் அங்குள்ள பிள்ளைகளை சம்பத்திரிசியாா் கல்லூாி .யாழ் -மத்திய கல்லூாி போன்ற கல்லூாி களில் சோ்த்துப் படிக்க வழி செய்தனா்..மேலும் கில்னா் ஒழுங்கையில் உள்ள அமொிக்கன் மிஷன் பாடசாலையும் சேணிய தெரு வில் உள்ள அமெரிக் கன் மிஸன் பாடசாலையுமே பிற்காலத்தில் கற்க வழி வகுத்தன.கிறிஸ்த்தவமதம் புகுத்தப்பட்டது.என்போா் வறிய மக்கள் வாழ படிக்க சமூக அந்தஸ்த்துப் பெற உதவிய நல்லூா் ஞானப்பிரசாசம் சுவாமி போன்றோ ரையும் அவரால் ஆக்கப்பட்ட கோயில்களும் பாடசாலைகள் கருவியாய் இருந்தன என்பதையும் மறுக்க மறைக்க முடியாது.

ஆரோக்கிய மாதா கோயில் பங்கிலுள்ள திரு.அமிா்த நாதன். திரவியம் ஜோசப். திரு .அழகராசா நடேசு திருமதி. வேவி ஞானப்பிரகாசம் போன்றோா் முன்னின்று ஆரோக்கிய மாதா கோவிலுக்குப் பணியாற்றி வருகிறவா்கள். இன்று முதலிடமாக இப்போது மேற்றாணிமாா்களாக வந்தோரும் குருக் களாய் அப்பங்கில் சேவையாற்றியுள்ளாா்கள். ஆரோக்கிய மாதாவை வேண்டி ஆறுதல் அடைந்தோா் பலா். ஆரோக்கிய மாதா கோயில் வரலாற்றை மாாியாச்சி வல்லிபுரத்தின் பேரப்பிள்ளைகளாகிய செல்வராசா. சிங்கராசா ஆகியோாிடம் கேட்டறிந்து எழுதப்பட்டது..

**ஆசிரியர்: அலேக்சாண்டர் செல்வராசா பண்டிதர்**

**போதனா ஆசிரியர் பலாலி.**

# கடுகு சிறிது காரம் பெரிது.

முதல் முதலில் "**அன்புமக்களே**" என்ற புத்தகத்தை நான் பார்த்த போது இதுவெல்லாம் ஒரு புத்தகம் என்ற எண்ணக் கருவே என் மனதில் பதிந்தது. பேனா பிடிப்பவர்கள் எல்லோரும் எழுத்தாளர்கள் ஆகிவிட் டார்கள் எல்லாரும் எழுதுகிறார்கள் நாங்களும் ஒரு புத்தகம் எழுதினால் என்ன? என்று நினைத்து இவர் களும் புத்தகம் எழுதுகிறார்கள் என்று நினைத்தப டியே யார்? இந்தப் புத்தகத்தை எழுதியவர் என்று புத்தக ஆசிரியரின் பெயரைத் தேடினேன். திரு. டேவிட் தோமஸ் என்ற பெயர் கண்களில் பட்டதும் தெரிந்த நபராச்சே என்ற ஆச்சரியக் குறியோடு அப்படி என்ன- தான் எழுதப்பட்டுள்ளது என்று வாசிக் கத் தொடங்கினேன். அப்பொழுதான் தெரிந்தது இப்புத்தகத் தில் எழுதப்படவில்லை சொல்லப்படு கிறது என்று.

கடுகு சிறிது காரம் பெரிது என்பார்களே அதுபோல் இந்தப் புத்தகம் அமைந்திருந்தது பக்கம் பக்கமாக பல தாள்களில் எழுதப்படாமல் ஒரு சில பக்கங்களில் ஒரு சில தாள்களில் மறைந்திருந்த விடையங்கள் இலை மறை காயாக பல பயனுள்ள விடயங்கள் அதில் புதைந்து கிடந்தது. சில நிமிடங் களிலேயே வாசித்து முடிக்கக்கூடிய புத்தகமாக அமைந்திருந் தாலும் வாழ் நாள் எல்லாம் பயன் பெறக் கூடிய விடையங்களை சுமந்த வண்ணம் காணப்பட் டது.

இன்று நம்மவர்களிடையே புத்தகம் படிக்கும் பழக்கம் வெகு வாகக் குறைந்துகொண்டு வருகிறது. நவீன உலகில் விஞ்ஞான வளர்ச்சியில் ஊன்றிக் கால்பதித்த வாசகர்கள் கணனி ஊடாக மற்றும் எலக்ரோணிக் கருவிகள் ஊடாக வாசிக்கப் பழக்கப் பட்ட மக்கள் ஐம்பது நூறு பக்கங்கள் கொண்ட புத்தகங்களை வாசிப்பதற்கே பஞ்சிப்படுகிறார்கள். அதையும் மீறி வாசிக்கி றார்கள் என்றால் சில வேளை அந்தப் புத்தகத்தை வாசித்து முடிக்க ஒரு வாரம் ஏன் ஒரு மாதம் கூட ஆகிவிடுகிறது. இந்தவ கையில் அன்பு மக்களே என்ற இந்தப் புத்தகம் மேற் கூறிய சிரமத்தைக் கொடுப் பதில்லை.

குறிப்பாக ஆன்மீக விடயங்களைத் தாங்கி வரும் இப்புத்தகம் திருச்சபை வரலாற்று உண்மை களையும் திருச சபை நடைமுறைப்படுத்தும் ஆண்டுக் கான வழிபாட்டு முறைகள் ஞான ஒடுக்கங்கள் பக்தி முயற்சிகள் யாத்திரை ஸ்தலங்கள் தரிசித்தல் அடங்கிய விடயங்களை அவ்வப் போதுவெளியிட்டு ஆன்மீகத் தாகமுடையவர்களின் தாகங் களைத் தணிக் கின்றது.

பெரிய ஸ்தாபனமாக நமது கண்களுக்குப் புலப்படும் நமது திரு அவையின் ஓர் அங்கமாக விளங்கும் நமது கனடா தமிழ்ப் பங்கினால் ஆற்றப் படும் சேவைகளுக்கு நிகரான விடயங்களை இப்புத் தகத்தில் வெளியிடப்படும் ஆன்மீகப் பணிக்கான நடை முறைகளில் பங்குபெறுவதின் மூலம் நாம் பல தடவைகள் பயன்பெற்றுள்ளோம்.

இந்நூலாசிரியர் சாதாரன பொதுநிலையாளராகக் காணப்பட்டாலும் இவர் ஒழுங்கு செய்யும் குருக்கள் மிகவும் ஆழமான விசுவாசப் பற்றுடையவர்களாகவும் தரமான அதே வேளை போதிய பயிற்சியும் அனுபவ மும் உடையவர் களாகவும் காணப்படுவதை இவர்கள் நடத்தும் ஆன்மீக வழி பாடுகளில் பங்கெடுப்பதின் மூலம் விளங்கிக் கொள்ளலாம்.

இன்று நாம் கனடாவில் தமிழில் திருப்பலியில் பங்கெடுத்துப் பயன்பெறுகிறோம் என்றால் யாத்திரை ஸ்தலங் களைத் தரிசித்துப் பயன்பெறுகிறோம் என் றால் ஆரம்பத்தில் கனடா வந்து திரு. டேவிட் தோமாஸ் அவர்களுடன் இணைந்து செயல்பட்டவர்கள் இப்புத்தகத்தை ஆரம்பத்தில் இருந்து படித்து வந்தவர் களுக்கு மட்டுமே தெரியும்.

வாசக நெஞ்சங்கள் "அன்புமக்களே" கத்தோலிக்க சஞ்சி கைக்கு மனமுவந்து கை கொடுத்தால் மேலும் பல பயனு-ள்ள விடயங்களை நமதாக்கிக் கொள்ள லாம். நன்றி!

காவலூரான்.
6/6/2016

# மிட் லாண்ட் வேத சாட்சிகள் திருத்தல யாத்திரை

.அனுபவங்கள் என் எழுதுகோல் பார்வையில்.., இயற்கை அழகெல்லாம் கொட்டிக்கிடக்கும் அழகிய சூழல் .சில்லென்ற குளிர் காற்று. எங்கும் பசுமை பாடும் மரங்கள். மனதுக்கு நிறைந்த மகிழ்ச்சி தரும் தேவாலயம்..அருகே அழகான ஆறு. அமைதியின் இருப்பிடமாம் தேவ சந்நிதானத்தை தரிசிக்கும் பாக்கியம் எனக்கும் முதலில் கிடைத்தது...1992.இல். தேவ மாதா பார்வையற்ற ஒருவருக்கு பார்வை கொடுத்த இடம் எனது உறவினர்களால் எனக்கு அறிமுகப்படுத்தப் படைத்து. அந்த இடத்தில் நிற்கும் போது மிகவும் மகிழ்ச்சியாக இருப்பதை அன்று உணர்ந்தேன். இன்று வரை அந்த அன்பில் திளைத்து மகிழ்கிறேன். கோடை கால பயணங்களில் மிடலாண்ட்வேத சாட் சிகள் தேவாலயம்மிக முக்கியத்துவம் வாய்ந்தது. இன ,மத, நிற , நாடு வேறுபாடுகள் இன்றி அனைவரும் ஒரு கூடி ஆராதித்து மகிழ்ந்து தமக்கான உணவுகளையும் அங்கே சமைத்து உண்டு மகிழ்ந்து இளைப்பாறும் காட்சி காண்பதற்கும் ஆனந்தமே. அதிசயிக்கத் தக்க விடயம் இலங்கை மடு மாதா அன்னை இங்கு எழுந்தருளி தன்அருளையும் ஆசிகளையும் பொழிவது. மிகப் பெரும் விழாவாக தமிழில் திருப்பலிகள் வேண்டுதல்கள் வணக்கத்துக்குரிய பேராயர்களால் நிகழ்த்தப் படுதல். இலங்கையில் இருந்தும் விசேடமாக பேராயர் இங்கு வருகை தருவது மிகவும் பெருமைக்குரியதே. எனக்கும் இந்த விழாவில் பங்கு பற்றும் வாய்ப்புக்கு கிடைத்தது . மதிப்புக்குரிய சகோதரன் டேவிட் தோமஸ் அவரது குழுவினர் இறை அன்பில் ஊறிய பெரியவர்கள் அனைவருடனும் பேருந்தில் ஒன்றாகச் செல்லும் வாய்ப்புக்கு கிட்டியது.ஒவ்வொரு வருடமும் இவர்களின் இந்த திருத்தல யாத்திரையால் பயன் பெறுபவர்கள் ஏராளம். மத வேறுபாடுகள் இன்றி மன ஒற்றுமையுடன் அனைவரையும் அழைத்துச் செல்லும் இறைபணிக்கு என் வாழ்த்துக்கள். ஒவ்வொரு பக்தரின் வேண்டுதல்களும் அன்னையின் அருளால் நிறைவேற்றப் படுகின்றன. செபமாலைகள் பிரார்த்தனைகளை அன்னையிடம் அழைத்துச் செல்லும் முத்துக்களாகின்றன. என் வேண்டுதல்கள் பலவும் நிறைவேறி இருக்கின்றன. அந்த மண்ணுக்கு நானும் நன்றியுடன் சாட்சியாகிறேன். புனித மண்ணும் என் எண்ணங்களை விடடகலாத மடுமாதா ஆசிகளும் உங்களையும் ஆசீர்வதிக்க வேண்டுகிறேன். வாழ்க்கைப் பயணம் இனிது அன்பினாலும் ஆசிகளாலும் அது நிறையும் போது மட்டுமே.என் எண்ணங்களில் சிலவற்றை வடிக்க சந்தர்ப்பம் தந்த சகோதரன் மதிப்புக்குரிய டேவிட் தோமஸ் , சகோதரி மரீனா அவர்களுக்கும் என் நன்றியும் வாழ்த்துக்களும். தொடர்க உங்கள் பணிகள் . மீண்டும் தொடர்வேன்.

**அன்புடன் யாழ் தமிழ் மகள் மணிமேகலை**
**.கைலைவாசன்**.

## இரக்கத்தின் ஆண்டிற்கான செபம்

எம் ஆண்டவராகிய இயேசுவே. இறைதந்தையைப் போல் இரக்கம் உள்ளவராக வாழும் படி நீரே எமக்கு கற்றுத் தந்திருக்கின்றீா். அதே போன்று என்னைக் காண்பவன் என் தந்தையைக் காணபான் என்றும் கூறி இருக்கின்றீர். உமது திருமுகத்தை காட்டி எம்மை மீட்டருளும்.உமது இரக்கம் நிறைந்தபார் வையினால் சக்கேயுவையும் மத்தேயுவையும் பணத்தின் அடிமைத்தனத் திலிருந்து மீட்டது போல் விபச்சாரப் பெண் மரிய மதலேனால் போன்றோர் உமது படைப்பிலே மகிழ்வைத் தேடியது போல பேதுரு உம்மை மறுதளித்த பின் கண்ணீர் விட்டு அழுதது போல மனம் திரும்பிய கள்ளவனுக்கு வானக வீடு வாக்களிக்கப்பட்டது போல நாமும் மாறுவதற்கு "கடவுளுடைய கொடை எது என்பதை நீர் அறிந்திருந்தால்" என்று சமாரியப் பெண் ணுக்கு நீர் கூறிய வார்த்தையை நாங்களும் செவிமடுக்கச் செய்தருளும். காணமுடியாத வானகத் தந்தையைக்காண கூடிய முகதரி சனமாக இருப்பவர் நீரே.சிறப்பாக மன்னிப்பு இரக்கம் போன்ற மேலான கொடைகளையும் தன்னகத்தே கொண்டிருப்பவரே நாம் வாழும் திருச்சபை உமது காணக் கூடிய முகத் தரிசனமாக இருக்கச் செய்தருளும். அத் திருச்சபையின் கடவுள் உயிர்த்து மகிமைப் படுத்தப் பட்டவர் என்பதை உணர்ந்து உமது பணியாளர்கள் தமது பலவீனத்தின் மத்தியிலும் தவறுகளிலும் அறியாமையிலும் உமது இரக்கத் தையும் அன்பையும் சுவைக்கச் செய்த ருளும் .அவர்களை நாடிச்செல்வோர் இறைவனின் மன்னிப் பையும் அன்பையும் பெற்றிடச் செய்தருளும். உமது தூய ஆவியை அனுப்பி எங்கள் ஒவ்வொருவரையும் அபிஷேகம் செய்து புனிதப்படுத்தியருளும். இதன் மூலம் நாம் கொண்டாடும் இரக்கத்தின் ஆண்டு கடவுளின் கருணையை வழங்கும் ஆண்டாகவும் உமது திருச்சபை புதுப்பிக்கப்பட்ட ஆர்வத்துடன் எழி யோருக்கான நற்செய்தியை கொண்டு செல்லவும் அடிமைத்தனத்தின் சிறையில் வாழ்வோருக்கு விடுதலை வாழ்வு கிடைக்கும் என்பதையும் அறிவித்து பார்வையற்றோர்க்கு பார்வை அளித்தி டவும் செய்தருளும். இவை அனைத் தையும் இரக்கத்தின் அன்னையாகிய உமது தாய் மரியாளின் வேண்டுதளின் மூலம் பெற்றுத்தந தருளும். இறைவனோடு என்றேன்றும் வாழ்ந்து ஆட்சி செய்கின்றவரும் தூய ஆவியுமாகிய ஆண்டவரே ஆமென்.

### *தூய கன்னி மரியாளின் விண்ணேற்புப் பெருவிழா தூர்து அன்னை திருத்தலம் பிரான்ஸ்*

கன்னி மரியாளின் விண்ணேற்பு பெருவிழா திருப்பலியானது ஆகஸ்ட 15ம் திகதி காலை 10.45 மணிக்கு ஆரம்பமாகிறது. அன்னையின் பக்தர்கள் அனைவரையும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறார்.

பங்குத்தந்தை: லீனஸ் சொய்சா

## வெல்மொறின்

இந்த வருடம் வல்மொறின் தேர்த் திருவிழா 23ம் திகதி 2016 நடைபெறவுள்ளது ஆகவே 22ம் திகதி சனிக்கிழமை புறப்பட்டு கனடாப் பாராள மன்றம் பார்வையிட்டு கிறோக்கோ புனித லூர்து மாதா தேவாலயம் (உருழைக்கிழங்கு மாதா) சென்று புனித சூசையப்பர் தேசிய தேவாலயம் சென்று மொன்றியலில் இரவு ஹொட்டலில் தங்கி 23ம் திகதி அதிகாலையில் வல்மொறின் சென்று தேர் திருவிழாவில் பங்கு கொண்டு அன்றைய தினம் மாலை ரொறொன்ரோ வருகை தருவோம் வர விரும்புகின்றவர்கள் தயவு செய்து முன்பே உங்களின் பெயரைப் பதிவு செய்து கொள்ளுங்கள். தொலை பேசி **647 348 5100.**

## கனேடிய தேசியத் திருயாத்திரை

ஆடி மாதம் 30,31 ஆவணி மாதம் முதலாம் திகதிகளில் புனித சூசையப்பர் தேசிய தேவாலயம் மொன் றியல், புனித மேரி மெடெலின் தேசிய தேவா லயம் டுப் கேப் ரூரோர் புனித அன்னம் மால் தேசிய தேவாலயம் கீயூபெக், நோற்றடம் புனித கதவு தேவாலயம் இந்த நான்கு தேவாலயத் திலும் புனித கதவுகள் உள்ளன யாவும் நாம் நுழைந்து ஆன்மீகம் அளிக்கும் ஆறுதல் பெறுவதற்கு செபிப்போம் உலகப் புகழ் பெற்ற முக்கிய இடங்களும் பார்வையிடுவோம் வாருங்கள் ஆன்மீகத் திற்கும் அறிவுக்கும் விருந்தாக அமையும் அறியாமை போக்கும் புனித யாத்திரை தொடர்புகளுக்கு

**647 348 5100**

**நன்றி.**

**VIJAY SELVARAJAH**, B.Com,CGA
Mortgage Agent
MortgageAlliance.Com/VijaySelvarajah
MORTGAGE ALLIANCE
Access Inc.
vselvarajah@mortgagealliance.com
(416) 906-4222
209-8130 Sheppard Ave East, Toronto M1B 3W3
*Independently Owned and Operated Lic # : 11404

---

**Sumi Jeyananthan**
Sales Representative
Cell: 647-893-2317
Bus: 905.201.9977
Fax: 905.201.9229
sumithra.jeyananthan95@gmail.com
205-7 Eastvale Dr.,Markham, ON L3S 4N8
HOMELIFE HIGHER STANDARDS
Homelife/Future Realty Inc., Brokerage
Independently Owned and Operated
MLS
*Higher Standards Agents... Higher Results!*

---

**FINDING HOMES TO FIT YOUR LIFESTYLE**

**Suba Aynkharan**
Broker
416-722-4444

RE/MAX COMMUNITY Realty Inc., Brokerage

**Christina Vilosanan**
Sales Representative
416-276-9530

---

**Siva Nagamany**
Sales Representative
HOMELIFE HIGHER STANDARDS
Cell: 647-289-0091
Off: 905-201-9977
Fax: 905-201-9229
Email : home4sales@hotmail.com
**HOMELIFE/FUTURE REALTY INC.**, BROKERAGE*
7 Eastvale Dr, Unit #205, Markham, ON L3S 4N8
*Independently owned and operated

---

**Ravi Tharmalingam**
Sales Representative
**Cell: 416.319.7507**
Email: ravis319@hotmail.com
HOMELIFE HIGHER STANDARDS
**HomeLife/Galaxy**
**Realty Inc., Brokerage***
880 Ellesmere Road, Suite 204, Toronto, ON M1P 2W6
Bus: 416.284.5555

---

**WIND STAR AUTO COLLISION**
In Business Since 1975
RANJAN
Body Work, Painting & Mechanical Repairs
Specialist in Insurance Claims
Unibody Frame Straightening
Using Mig Welder
Over 30 Years Experience in Canada
50 A Howden Road
Scarborough, Ontario
M1R 3E4
Tel: 416-757-8676
416-757-7599
Email: windstar_ranjan@hotmail.com
**After Hours: 416-564-9796**

---

**SHAN THAYAPARAN**
Sales Representative
#1 RE/MAX
Dir: 416.567.7675
Bus: 416.321.2228
www.shan123.com
**Long name, Amazing results!!!**
Re/Max Vision Realty Inc. Brokerage
INDEPENDENTLY OWNED & OPERATED

---

RESIDENTIAL & COMMERCIAL
Buying, Selling, leasing & Investing
I can also assist you with: Mortgage Financing,
Home Inspections,
Real Estate Lawyer and Insurance
call Vany Jeganmohan
for information on homes
available in area of your choice
HOMELIFE HIGHER STANDARDS
**VANY JEGANMOHAN**
SALES REPRESENTATIVE
416 670 7436
Homelife/GTA
Realty Inc. Brokerage*
Independently owned and operated
*Discover peace of mind in Life*
LIFE INSURANCE- ( TERM/WHOLE LIFE)
PAID UP ONLY 10,15,20 OR 65 YEARS.
COVERAGE UP TO AGE 100 YEARS
NON MEDICAL INSURANCE UP TO AGE 85
**BRINGING YOUR DREAMS TO LIFE TODAY**

---

**brightsun**
Printing - sign - Photos - Graphics
120 Dynamic Drive, Unit 23
Scarborough Ontario
M1V 5C8, Canada.
cell: 416-845-6565
tel : 416-297-9090
fax: 416-297-6497
Open: Mon - Fri 3:00pm - 9:00pm Sat - Sun 11:00am - 5:00pm
email: brightsun2000@gmail.com

---

**வீடு வாங்க விற்க**
Free Home Staging
Free Market evaluation
Friendly service.
HOMELIFE HIGHER STANDARDS
**MOHAN NADARAJAH**
HOMELIFE/FUTURE REALTY INC, BROKERAGE*
DIR:-416-520-2587 OFFICE: 905-201-9977
FAX: 905-201-9229 WWW.GETMOHAN.COM